حدائق المعروف ـ تاميلي

# புண்ணியங்களின் பூங்காவனம்


جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي

185

هاتف: ٤٢٣٤٤٦٦ ٠١٦ ـ فاكس: ٤٢٣٤٤٧٧ ٠١٦

# حدائق المعروف

**ترجمه إلـــى اللغة التاميلية:**

جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي

**الطبعة الثانية: ١٤٤٢/٨ هـ.**


**ⓒ شعبة توعية الجاليات بالزلفي، ١٤٣٠هـ**

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

شعبة توعية الجاليات بالزلفي

حدائق المعروف – تاميل / شعبة توعية الجاليات بالزلفي-
الزلفي ، ١٤٣٠ هـ
١١٠ ص؛ ١٧ سم
ردمك : ٨-١٦-٨٠١٣-٦٠٣-٩٧٨
(النص باللغة التاميلية )
١-التربية الإسلامية ٢- الأطفال- تعليم أ. العنوان

**رقم الإيداع : ١٤٣٠٠٣٦٣٤**

**ردمك : ٨-١٦-٨٠١٣-٦٠٣-٩٧٨**

# உள்ளே...

# حدائق المعروف
# புண்ணியங்களின் பூங்காவனம்
## பூங்கா 1
### முஸ்லிம்களின் குற்றங்குறைகளை மறைத்தல்

மறைத்தல் இரண்டு வகைப்படும். ஒன்று பார்வையை விட்டும் மறைத்தல், மற்றொன்று கருத்தை விட்டும் மறைத்தல். கருத்தை விட்டும் மறைத்தல் என்பது ஒரு முஸ்லிம் ஒரு பாவத்தைச் செய்வதை அல்லது ஒரு மானக்கேடான காரியத்தைச் செய்வதைப் பார்த்து விட்டீர்கள் எனில் அவனை அவமானப்படுத்தாதீர்கள். மாறாக அந்தப் பாவத்தைச் செய்வதைவிட்டும் அவனை நீங்கள் தடுங்கள். எளிய முறையில் அவனுக்கு அறிவுரை கூறுங்கள். அதில் மென்மையும் பரிவும் நிறைந்திருக்க வேண்டும். அவனது தவறை மறைத்து விடுங்கள்; அதை அம்பலப்படுத்தாதீர்கள். அல்லாஹ் அவனை மறைத்ததிலிருந்து வெளியாக்கி அவனைக் கேவலப்படுத்தி விடாதீர்கள்.

மாயிஸ்(ரலி) அவர்கள், விபச்சாரம் எனும் மானக்கேடான செயலில் தாம் விழுந்து விட்டதை அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் முன்னிலையில் வந்து தமது நாவால் ஒப்புக் கொண்டார்கள். இருந்த போதிலும் நபி (ஸல்) அவர்கள், அவர் தமது தவறை தமக்குள் மூடி மறைப்பதற்கும் மேலும் அவருக்கும் அல்லாஹ்வுக்கும்

இடையில் அவர் பாவமன்னிப்புத் தேடிக்கொள்வதற்குமே அவருடன் முயற்சி செய்தார்கள். நபி(ஸல்) அவர்கள் அவரிடம் இப்படியே சொன்னார்கள்: “திரும்பிச் செல்! பாவமன்னிப்புத் தேடி அல்லாஹ்வின் பக்கம் மீளு!”

பிறகு மாயிஸ்(ரலி) திரும்பிச் சென்றுவிடுகிறார். சற்று தூரம் சென்று விட்டு மீண்டும் நபி(ஸல்) அவர்களிடம் வந்து “என்னைத் தூய்மைப்படுத்துங்கள்” என்று கூறினார். நபியவர்களோ முன்பு கூறியதையே அவரிடம் கூறி னார்கள். இவ்வாறு அவர் நான்கு முறை செய்தார். இந்த மானக்கேடான காரியத்தை இவர் செய்திருப்பார் என்பதை நபி(ஸல்) அவர்கள் உறுதி செய்தபோது, மேலும் அதன் அழுக்கிலிருந்து தான் தூய்மைப்படுத்தப் பட வேண்டும்; தம் மீது எந்தப் பாவமும் இல்லாத நிலையில் அல்லாஹ்வை சந்திக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார் என்பதையும் நபி(ஸல்) அவர்கள் உறுதி செய்தபோது- அதன் பிறகுதான் அவருக்குத் தண்டனை நிறைவேற்றுமாறு தம் தோழர்களுக்குக் கட்டளையிட்டார்கள். உடனே தோழர்கள் அவரை அழைத்துச் சென்று அவரைக் கல்லால் எறிந்தார்கள். கற்கள் அவரைப் பலமாகத் தாக்கியபோது அதன் கடுமை தாங்க முடியாமல் அந்த இடத்தை விட்டும் அவர் ஓடினார், ஆனாலும் தோழர்கள் அவரைப் பிடித்து கல்லால் எறிந்து கொன்றார்கள். (பார்க்க: புகாரி 6815, முஸ்லிம் 1695)

அபூதாவூதின் ஒரு அறிவிப்பில் வந்துள்ளது: அவர் ஓடியதை நபி(ஸல்)அவர்கள் அறிந்ததும் தம் தோழர் களிடம் “அவரை நீங்கள் விட்டிருக்கலாமே! அவர் தவ்பா செய்து திருந்திருக்கலாம்; அல்லாஹ்வும் அவருடைய தவ்பாவை ஏற்றுக் கொள்ளலாம்” என்று கூறினார்கள். (பார்க்க: அபூதாவூத் 4419) பிறகு “இப்போது அவர் சொர்க் கத்தின் நதிகளில் மூழ்கிக் கொண்டிருக்கிறார்” என்று கூறினார்கள். (பார்க்க: ஜாமிவுல் ஸயீ.்.ப் 1333)

என்னே ஆச்சரியம்! இன்றைக்கும் சிலர் யாரிடமேனும் ஒரு தவறு ஏற்படாதா? அல்லது மானக்கேடான ஒரு செயல் நிகழாதா? என எதிர்பார்த்துக் கொண்டிருக் கின்றனர். எதற்காக? சம்பந்தப்பட்டவர்களிடம் அதனை எடுத்துச் சொல்லி ஷரீஅத் விரும்பும் வழிகளில் அதனை மறைப்பதற்காகவா? இல்லை! மாறாக அச்செய்தியை மக்களிடையே பரவச் செய்வதற்காக! மேலும் இன்டர் நெட் போன்ற நவீன செய்தி ஊடகங்கள் மூலம் பரப்பு வதற்காக. ஆம்! இது செய்தியைப் பரப்புவதில் இன்பம் காண்பதாக உள்ளது. அங்கிங்கெனாதபடி எங்கும் பரவியுள்ளது. செய்தி ஊடகங்களுக்குரிய நடை முறையான தீர ஆராய்தல் உறுதிப்படுத்துதல், தவறை மறைத்தல், ஒழுங்குமுறை ஆகியவை இதில் பேணப் படுவதில்லை. ஷரீஅத் விரும்பும் நலம் நாடுதலின் அடிப்படைகள் இவர்களிடம் எங்கே உள்ளன?

“வெட்கக்கேடான செயல் நம்பிக்கை கொண்டோரிடம் பரவ வேண்டும் என விரும்புவோருக்கு இவ்வுலகிலும் மறுமையிலும் துன்புறுத்தும் வேதனை உண்டு. அல்லாஹ்வே அறிகிறான். நீங்கள் அறியமாட்டீர்கள்” (24:19) என்று அல்லாஹ் கூறியிருக்கிறானே! இதில் இவர்களின் நிலை என்ன?

இத்தகையோர் மக்களின் குறைகளைத் துருவிப்பார்ப் பதை விட்டுவிடவில்லையெனில் இவர்களே கேவலப்படுத் தப்படுவார்கள் எனபதை அஞ்சிக் கொள்ளட்டும்.

عَنْ أَبِي بَرْزَةَ الْأَسْلَمِيِّ قَالَ نَادَى رَسُولُ الله ﷺ حَتَّى أَسْمَعَ الْعَوَاتِقَ فَقَالَ يَا مَعْشَرَ مَنْ آمَنَ بِلِسَانِهِ وَلَمْ يَدْخُلْ الْإِيمَانُ قَلْبَهُ لَا تَغْتَابُوا الْمُسْلِمِينَ وَلَا تَتَّبِعُوا عَوْرَاتِهِمْ فَإِنَّهُ مَنْ يَتَّبِعْ عَوْرَةَ أَخِيهِ يَتَّبِعْ الله عَوْرَتَهُ حَتَّى يَفْضَحَهُ فِي بَيْتِهِ

(حم/ ١٨٩٦٣) وصححه الألباني في صحيح الجامع

அபூபர்ஸா அஸ்லமி(ரலி)அறிவிக்கிறார்கள்: “உள்ளத் தில் ஈமான் நுழையாமல் உதட்டளவில் நம்பிக்கை கொண்ட மக்களே! முஸ்லிம்களைப் பற்றி புறம் பேசா தீர்கள். அவர்களின் குறைகளைத் துருவிப் பார்க்கா தீர்கள். ஏனெனில் தன் சகோதரனின் குறைகளை யார் துருவிப் பார்க்கிறாரோ அவரின் குறைகளை அல்லாஹ் துருவுவான். அவருடைய வீட்டிலேயே அவரைக் கேவலப் படுத்தும் வரை” என நபி (ஸல்) அவர்கள் (வீட்டினுள் இருக்கின்ற) கன்னிப் பெண்களுக்கும் கேட்கின்ற

வகையில் உரத்த குரலில் சொன்னார்கள். (அஹ்மத் 18963) அல்பானி இதனை சரிகண்டுள்ளார்கள்.

பார்வையை விட்டும் மறைத்தல் என்பது ஆடையில் லாதோருக்கு ஆடை வழங்கி மக்களின் பார்வையை விட்டும் அவரது மானத்தை மறைப்பதாகும். திண்ண மாக இது நபி(ஸல்)அவர்களின் வழிகாட்டுதலில் உள்ள தாகும். மாயிஸ்(ரலி) அவர்களின் சம்பவத்தில் இந்த இரண்டு வகையான மறைத்தலும் உள்ளது. அபூதாவூதின் ஓர் அறிவிப்பில், (உயிரிழந்த) மாயிஸை ஆடையால் மறைப்பதற்கு நபி(ஸல்) அவர்கள் ஹஸ்ஸால் என்ற மனிதருக்கு ஆர்வமூட்டியதாக வந்துள்ளது.

((لَوْ سَتَرْتَهُ بِثَوْبِكَ كَانَ خَيْرًا لَكَ)) (د/ ٤٣٧٧) صححه الألباني

அதாவது “உமது ஆடையால் அவரை நீர் மறைத்தி ருந்தால் அது உமக்கு நன்மை தருவதாக இருந்தி ருக்கும்” என்று அந்த மனிதருக்கு நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (அபூதாவூத் 4377) இதனை அல்பானி அவர்கள் சரிகண்டுள்ளார்கள்.

முஸ்லிம்களின் மானத்தை- குற்றங்குறைகளை அவர் கள் உயிருடன் இருக்கும்போதும் இறந்த பிறகும் மறைப் பதற்கு- பார்வையை விட்டும் மறைத்தல், கருத்தை விட்டும் மறைத்தல் ஆகிய இரு வகைகளிலும் மறைப் பதற்கு நபி(ஸல்)அவர்கள் எவ்வளவு ஆர்வமும் அக்க

றையும் காட்டியுள்ளார்கள் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இதோ முன் சென்ற ஸலபுஸ் ஸாலிஹீன்களான நம் சான்றோர்களில் இருவருக்கு மத்தியில் நடந்த உரை யாடலைக் கேளுங்கள்! அதில் அவர்கள், முஸ்லிம்களின் குறைகளை நபி(ஸல்)அவர்கள் மறைப்பது தொடர்பான அவர்களின் வழிகாட்டுதல் பற்றி நினைவுகூரிக் கொண் டிருந்தார்கள்.

இதோ அப்துல்லாஹ் அல்ஹவ்ஸனீ கூறுகிறார்: நான், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முஅத்தின்- பள்ளிவாசலில் பாங்கு சொல்லும் பணி செய்தவரான பிலால் (ரலி) அவர்களை ஹலப் எனும் ஊரில் சந்தித் தேன். அவர்களிடம், "பிலாலே! நபி(ஸல்)அவர்கள் எப்படி செலவு செய்து வந்தார்கள்? என்பதைக் கூறுங்களேன்" என்றேன். அவர் கூறினார்: நபி (ஸல்) அவர்களிடம் (பொருள்) ஏதும் இருந்ததில்லை. அல்லாஹ் அவர்களை இறைத்தூதராக அனுப்பியதிலிருந்து அவர்கள் மரணிக் கும் வரை அவர்களுக்காக நான்தான் செலவுக்குப் பொறுப்பேற்றிருந்தேன். அவர்களிடம் யாரேனும் ஒரு முஸ்லிம் வந்தால்- அவரிடம் ஆடையில்லாமல் இருப் பதை நபியவர்கள் கண்டால் எனக்குக் கட்டளையிடு வார்கள். நான் சென்று (யாரிடமேனும்) கடன் வாங்கி அவருக்காக ஒரு ஆடையை வாங்கி அவருக்கு அணியக் கொடுப்பேன்; உண்ண உணவும் கொடுப்பேன்.

இந்நிலையில் ஒரு நாள் இணைவைப்பவர்களில் ஒருவர் என்னை வழிமறித்து, "பிலாலே! என்னிடம் வசதி இருக்கிறது. என்னைத் தவிர வேறு யாரிடமும் நீர் கடன் வாங்க வேண்டாம்" என்று கேட்டுக் கொண்டார். நானும் அவ்வாறே செய்தேன். ஒரு நாள், நான் உளூ செய்து விட்டு தொழுகைக்கு பாங்கு சொல்லத் தயாரானேன். அப்போது அந்த இணைவைப்பவர் வியாபாரிகளின் ஒரு குழுவினருடன் வந்தார். என்னைப் பார்த்ததும், "ஓ கருப் பியே!" என்றார். நான் "இதோ வந்துவிட்டேன்" என்றேன். என்னை வேண்டா வெறுப்புடன் வரவேற்றார். மேலும் என்னை நோக்கி கடுஞ் சொல்லைக் கூறினார். மேலும், "ஒரு மாதம் முடிவதற்கு இன்னும் எத்தனை நாட்கள் இருக்கின்றன?" என்று கேட்டார். "இன்னும் சில நாட்களே இருக்கின்றன" என்றேன். "இன்னும் நான்கே நாட்கள் தான் இருக்கின்றன. நீர் தர வேண்டிய கடனுக்குப் பகர மாக உன்னை நான் அழைத்துச் சென்று, முன்னர் நீ (அடிமைச் சேவகம் செய்து கொண்டு) இருந்ததுபோல் ஆடுகள் மேய்க்கும் பணியில் உன்னை விடப்போகிறேன்" என்று கூறினார். மனிதர்களின் உள்ளங்களில் ஏற்படு கின்ற கவலை என் உள்ளத்திலும் ஏற்பட்டது.

பிறகு நான் இஷா தொழுது முடித்ததும் நபி(ஸல்) அவர்கள் தமது வீட்டிற்குத் திரும்பினார்கள். நான் அங்கு சென்று வீட்டிற்குள் நுழைய அனுமதி கேட்டேன். எனுக்கு அனுமதியளித்தார்கள். நான் கூறினேன்: "அல்லாஹ்வின்

தூதரே! என் தாயும் தந்தையும் தங்களுக்கு அற்பணமா கட்டும்! நான் யாரிடம் கடன் வாங்கிக் கொண்டிருந் தேனோ அந்த இணைவைப்பவர் என்னிடம் இன்னின்ன வாறு கூறினார். நான் வாங்கிய கடனை அடைப்பதற்கு உங்களிடம் எதுவுமில்லை. என்னிடமும் எதுவும் கிடை யாது. அவரோ என்னை அவமானப்படுத்த உள்ளார். ஆகையால் எனக்கு அனுமதி தாருங்கள்; இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட சில கோத்திரத்தாரிடம் ஓடிச் சென்று விடுகிறேன்; என் கடனை அடைப்பதற்குரிய வசதியை அல்லாஹ் தன் தூதருக்கு வழங்கும் வரை.”

பிறகு (அவர்கள் எனக்கு அனுமதி வழங்கியதும்) நான் அங்கிருந்து புறப்பட்டு என் வீட்டிற்கு வந்தேன். எனது வாள், (உணவுக்குரிய) பை, செருப்பு, கேடயம் ஆகிய வற்றை என் தலைமாட்டடில் வைத்துக் கொண்டு வைகறை வந்ததும் (பஜ்ருக்கு முன்) புறப்பட ஆயத்த மானேன். அப்போது ஒரு மனிதர் ஓடி வந்து, “பிலாலே! அல்லாஹ்வின் தூதரின் அழைப்புக்கு பதில் தாருங்கள்” என்று கூறினார். நான் அவர்களிடம் வந்தேன்.

அப்போது நான்கு ஒட்டகங்கள் மண்டியிடப்பட்டு இருந்தன. அவற்றின் மீது பொதிகள் இருந்தன. நான் அவர்களிடம் செல்ல அனுமதி கேட்டேன். நபி(ஸல்) அவர்கள் (எனக்கு அனுமதி வழங்கிவிட்டு), “மகிழ்ச்சி அடைவீராக! உமது கடனை அடைப்பதற்குரிய செல்

வத்தை அல்லாஹ் உமக்குத் தந்து விட்டான். நான்கு ஒட்டகங்கள் மண்டியிடப்பட்டிருப்பதை நீர் பார்க்கவில்லையா?" என்று என்னிடம் கூறினார்கள். நான் "ஆம்" என்றேன். "இந்த ஒட்டகங்களும் அவற்றின் மீதுள்ள பொருட்களும் உமக்குரியது. அவற்றின் மீது துணி மணிகள், உணவுப் பொருட்கள் உள்ளன. ஃபதக் நாட்டின் அரசர் இவற்றை எனக்கு அன்பளிப்பாக வழங்கியுள்ளார். இவற்றைப் பெற்றுக் கொண்டு உமது கடனை அடைப்பீராக!" எனக் கூறினார்கள்....

பிறகு பிலால்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களின் கடனை அடைத்துவிட்டு அவர்களிடம் தெரிவித்தபோது அல்லாஹ்வைப் பெருமைப்படுத்திப் புகழ்ந்தார்கள். காரணம் (கடனை அடைப்பதற்கு முன்) அப்பொருள் தம்மிடம் இருக்கும் நிலையில் தமக்கு மரணம் வந்து விடுமோ என்று அவர்கள் அஞ்சியதால்தான்.(அபூதாவூது 3055) இதனை அல்பானி அவர்கள் சரிகண்டுள்ளார்கள்.

குற்றங்குறைகளை மறைத்தல் என்பது அழகிய பண்பாகும். இதனை உயர்ந்த மனிதர்கள் கடைப்பிடித்து வருகிறார்கள். அவர்கள்தான் தங்கள் சபைகளில் மனிதர்களின் தன்மானங்களைக் காயப்படுத்தும் பேச்சுக்களில் மூழ்குவதை விட்டும், அவர்களின் தவறுகளை விமர்சிப்பதற்கு தங்கள் பேனாவை உயர்த்துவதை விட்டும் தங்கள் ஆன்மாக்களைத் தூய்மைப்படுத்துகிறார்கள்.

அவர்களின் குறைகளை செவியேற்பதை விட்டும் தங்க ளின் செவிகளைத் தூய்மைப்படுத்துகிறார்கள். மனிதர் களின் தவறுகளை மறைத்தல் என்பது என்னே அழகான பண்பு! ஏனெனில் இதில் அல்லாஹ்வின் அருளை ஒப்புக் கொள்ளும் அம்சம் இருக்கிறது. நாம் ஆடையின்றிப் பிறந்த பிறகு அவனே அழகிய உடைகளால் நம்மை மறைத்தான்.

﴿يَا بَنِي آدَمَ قَدْ أَنْزَلْنَا عَلَيْكُمْ لِبَاسًا يُوَارِي سَوْآتِكُمْ وَرِيشًا وَلِبَاسُ التَّقْوَى ذَلِكَ خَيْرٌ ذَلِكَ مِنْ آيَاتِ اللهِ لَعَلَّهُمْ يَذَّكَّرُونَ﴾ [الأعراف:٢٦]

ஆதமுடைய மக்களே! உங்கள் வெட்கத்தலங்களை மறைக்கும் ஆடையையும், அலங்காரத்தையும் உங்க ளுக்கு நாம் அருளியுள்ளோம். இறையச்சம் எனும் ஆடையே சிறந்தது. இது அல்லாஹ்வின் சான்றுகளில் உள்ளதாகும். இதன் மூலம் அவர்கள் நல்லுணர்வு பெறக்கூடும். (7:26)

அவன் நமக்கு பேருபகாரம் செய்திருக்கின்றான். நாம் பாவங்களைச் செய்யும் போது அவன் நம்மைப் பார்த்தி ருந்தும் நாம் செய்த பாவங்களையும் தவறுகளையும் வெளிப்படுத்தி படைப்பினங்களின் முன்னிலையில் அவன் நம்மைக் கேவலப்படுத்தவில்லை. மேலும் வெட்கத்த லங்கள் வெளிப்பட்டு, பாவங்கள் வெளிச்சத்துக்கு வரும் நாளில் அல்லாஹ் உங்கள் பாவங்களை மறைப்பதை விட மிகப் பெரிய உபகாரம் வேறு என்ன இருக்க முடியும்?

((إِنَّ اللهَ يُدْنِي الْمُؤْمِنَ فَيَضَعُ عَلَيْهِ كَنَفَهُ وَيَسْتُرُهُ فَيَقُولُ أَتَعْرِفُ ذَنْبَ كَذَا أَتَعْرِفُ ذَنْبَ كَذَا فَيَقُولُ نَعَمْ أَيْ رَبِّ حَتَّى إِذَا قَرَّرَهُ بِذُنُوبِهِ وَرَأَى فِي نَفْسِهِ أَنَّهُ هَلَكَ قَالَ سَتَرْتُهَا عَلَيْكَ فِي الدُّنْيَا وَأَنَا أَغْفِرُهَا لَكَ الْيَوْمَ فَيُعْطَى كِتَابَ حَسَنَاتِهِ وَأَمَّا الْكَافِرُ وَالْمُنَافِقُونَ فَيَقُولُ الْأَشْهَادُ هَؤُلَاءِ الَّذِينَ كَذَبُوا عَلَى رَبِّهِمْ أَلَا لَعْنَةُ اللهِ عَلَى الظَّالِمِينَ)) (خ/ ٢٤٤١)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ் மு∴மினைத் தன் பக்கம் நெருங்கச் செய்து, அவன் மீது தன் திரையைப் போட்டு அவனை மறைத்து விடுவான். பிறகு, “நீ செய்த இன்ன பாவம் உனக்கு நினைவிருக்கிறதா? நீ செய்த இன்ன பாவம் உனக்கு நினைவிருக்கிறதா?” என்று கேட்பான். அதற்கு அவன் “ஆம், என் இறைவா? என்று கூறுவான். இவ்வாறாக இறைவன் (ஒவ்வொரு பாவமாக எடுத்துக் கூறி,) அவன் செய்த எல்லாப் பாவங்களையும் ஒப்புக் கொள்ளச் செய்வான். அந்த மு∴மின் “நாம் இத்தோடு ஒழிந்தோம்” என்று தன்னைப் பற்றிக் கருதிக் கொண்டிருக்கும் போது இறைவன் “இவற்றை எல்லாம் உலகில் நான் பிறருக்குத் தெரியாமல் மறைத்து வைத்திருந்தேன். இன்று உனக்கு அவற்றை மன்னித்து விடுகிறேன்” என்று கூறுவான். அப்போது அவனது நற்செயல்களின் பதிவேடு அவனிடம் கொடுக்கப்படும். நிராகரிப்பாளர்களையும் நயவஞ்சகர்களையும் நோக்கி சாட்சியாளர்கள், “இவர்கள்தாம் தம் இறைவன் மீது பொய்யைப்

புனைந்துரைத்தவர்கள். கவனத்தில் கொள்க! அநீதியிழைத்தோர் மீது அல்லாஹ்வின் சாபம் இருக்கிறது!” என்று கூறுவார்கள். (புகாரி 2441)

எனவே பிரியமானவர்களே! முஸ்லிம்களின் தப்புத் தவறுகளை மறைத்தல் எனும் பூங்காவிற்கு உளத் தூய்மை எனும் நீரைப் பாய்ச்சுங்கள்; நல்ல கனிகளை நீங்கள் பறிக்கலாம். ஏனெனில் “ஒரு முஸ்லிமுடைய தவறை ஒருவர் மறைத்தால் அல்லாஹ் அவருடைய தவறை இவ்வுலகிலும் மறுவுலகிலும் மறைப்பான்” என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

இறைவா! சகிப்புத் தன்மையும் பேரன்பும் மிக்கவனே! அழகிய உன் திரை மூலமும் தயாளம் நிறைந்த உன் மன்னிப்பின் மூலமும் எங்கள் குறைகளை மறைப்பாயாக!

## பூங்கா 2

## முஸ்லிம்களின் தேவையை நிறைவேற்றுதல்

கண்ணியத்திற்குரிய சகோதரர்களே! சிறப்புக்குறிய அறிஞர் பெருமக்களில் ஒருவர் எனக்குக் கூறிய ஒரு சம்பவத்தின் மூலம் இப்பூங்காவிற்குறிய செய்தியை இதோ உங்களுக்கு நான் அமைத்துத் தருகிறேன்.

சுமார் பதினெட்டு வயது இளைஞன்! நிரந்தர காச நோயளி! அஹ்ஸாவிலிருந்து தம்மாமுக்கு தனது வாகனத்தில் தன்னந்தனியாகப் புறப்பட்டான். தன் உறவினர்களிடம் அவன் போய்ச் சேர்வதற்குள் நெஞ்சு அடைத்துக்

கொண்டு மூச்சுத் திணறலை உணர்ந்தான். இது ஆபத்தான கட்டத்தின் ஆரம்ப அறிகுறி என்பதை இந்த நோய்க்கு ஆளானவர்கள் புரிந்து கொள்வார்கள். இத்த கைய நிலையை அடைந்தவருக்கு விரைவான மற்றும் நுட்பமான பாதுகாப்பு நடவடிக்கை மேற்கொள்ளப்பட வேண்டும். அவருக்கு அருகில் எந்நேரமும் ஆள் இருந்து கவனித்துக் கொண்டிருக்க வேண்டும். மேலும் அவரது உடல் நலனுக்கு சிறப்பு கவனமும் தேவைப்படும்.

இந்த இளைஞன் தனக்கு மயக்கம் வரலாம் சிறிது நேரம் மூர்ச்சையாகி கீழே விழுந்துவிடலாம் என்பதை அறிந்திருந்தான். ஆனாலும் அவன் யாரைச் சந்திக்கச் சென்றானோ அவர்களின் முன்னிலையில் இவ்வாறு நிகழ்ந்துவிடுமோ என்றே அஞ்சினான். ஆகையால் மனக் கவலை அல்லது மனக்குழப்பத்திற்கு ஆளானான். எனவே தம்மாம் வந்து சேர்ந்த உடனேயே அஹ்ஸா வுக்குத் திரும்பிவிட முடிவு செய்தான். அவனைச் சுற்றி யுள்ளவர்களோ அவனுக்கு நெஞ்சு அடைப்பும் மூச்சுத் திணறலும் ஏற்படுவதை உணர்ந்தனர். இது போன்ற நிலையில் அவன் அஹ்ஸாவுக்குத் திரும்பக் கூடாது என்றே அவர்கள் முடிவு செய்தனர். இதற்கு அவனை பலவகையிலும் வற்புறுத்தினர்.

ஆனால் அவன் இவை அனைத்தையும் நிராகரித்து விட்டு தனது வாகனத்தில் ஏறி தனது ஊருக்குத்

(அஹ்ஸாவுக்குத்) திரும்பினான். நிமிடங்கள் அவனுக்கு சிரமமாகவும் பாரமாகவும் நகர்ந்தன. ஒவ்வொரு நிமிட மும் அவனது மூச்சின் ஒரு பகுதியை நிறுத்திக்கொண்டே வந்தது. தன்னைச் சுற்றிலும் அவன் பார்க்கிறான். அவ னுக்கு உதவி செய்து இரக்கம் காட்டக்கூடிய தந்தை யையோ அவனுக்கு அன்பு செலுத்தி அரவணைக்கக் கூடிய தாயையோ உதவி செய்து ஆதரவு காட்டக்கூடிய சகோதரனையோ அவன் காணவில்லை. முன்னால் உற்று நோக்குகிறான். பாதை நீண்டு கொண்டு செல்வதைத் தவிர வேறெதுவும் தென்படவில்லை. அந்தப் பாதையை கடந்து முடிப்பதற்கும் அவனிடம் தெம்பில்லை. பாதிப் பாதையை அவன் கடந்தபோது துன்பம் அவனுக்கு அதிக மானது; நிதானத்தை அவன் இழந்தான்; அவன் கண்கள் நிலைகுத்தின; அவனது தவணை நெருங்கி விட்டதாகவும் எல்லாமே முடிந்துவிட்டதாகவும் உணர்ந்தான். உடனே அருகிலுள்ள ஒரு பாலத்தின் அடியில் தனது வாகனத்தை நிறுத்தினான்.

அந்தப் பாதை வழியாகச் செல்வோரிடம் உதவி தேடு வதற்குக்கூட அவனிடம் சக்தி இல்லை. எல்லா எதிர் பார்ப்புகளையும் அவன் இழந்தான். தன்னந்தனியாக இப்பயணத்தில் உயிர் எனும் அமானிதத்தை அல்லாஹ் விடம் ஒப்படைத்தவாறு அவனை நோக்கித் திரும்பினான். அவன் செய்த நல்ல காரியம் இதுதான். அதாவது எந்த உணர்வுமின்றி வாகனத்திலிருந்து வெளியேறி அதன்

முன் பகுதியில் மல்லாந்து படுத்துக் கொண்டான். காரணம் அவனது பலவீனத்தை அல்லாஹ் இலேசாக் கலாம். அவனது தனிமையை அவன் பரிவுடன் பார்க் கலாம். இந்த நேரத்தில் அவன் உணர்விழந்து மயக்க முற்றவனைப் போலானான். தனக்கு என்ன நடக்கிறது என்பதை அவன் அறியமாட்டான். ஆனால் அவனுக்குத் தெரிந்தது எல்லாம், தாம் இந்த வாழ்க்கையை விட்டுப் பிரியப் போகிறோம். அதன் அலங்காரத்திற்கு விடை கொடுக்கப் போகிறோம் என்பது மட்டுமே. ஆனாலும் அல்லாஹ்வின் அருள் அவனுக்காக காத்துக் கொண்டி ருந்தது. எப்படி இல்லாமலிருக்க முடியும்? அவன் மன்னிப் பவனும், அன்புமிக்கவனும், சகிப்புத்தன்மை மிக்கவனு மாயிற்றே!

வாகனத்தின் மீது உணர்வின்றிக் கிடக்கும் இந்த இளம் வாலிபனைப் பார்ப்பதற்காக பயணி ஒருவர் அங்கு சென்றார். விபத்து நடந்ததற்கான எந்த அறிகுறியும் அங்கில்லை. அல்லது இந்த நிலைமைக்கான நேரடியான எந்தக் காரணமும் அந்த வாலிபனிடம் தென்படவில்லை. அந்தப் பயணி இத்தகைய அதிகப்படியான கேள்வி களுக்கு தனது மனத்தில் இடம் கொடுக்காமல் இந்தப் பாவப்பட்ட இளைஞனுக்கு உதவி செய்ய முன்வந்தார். அவர் தனது கையால் அவனைத் தொட்டதும் அவனது கைகளில் இலேசான அசைவை உணர்ந்தார். அவன் தனது கைகளால் தனது மூக்கையும் வாயையும் சுட்டிக்

காட்டி, உயிர்வாழ்வதற்குத் தேவையான மூச்சு தன்னிடம் இல்லை என்பதை சைகையால் உணர்த்தினான். உப காரம் செய்ய வந்த அந்த மனிதர் அவனுக்கு இலேசாக உயிர் இருப்பது குறித்து மகிழ்வுற்றார். மேலும் அவர், தம் கையால் அவனைக் காப்பாற்ற வேண்டும் என்பதற் காகவே அல்லாஹ் தம்மை இவனிடம் அனுப்பியிருப் பதாக உணர்ந்து பக்கத்து ஊரில் உள்ள மார்பு சம்பந்தப்பட்ட நோய் சிறப்பு மருத்துவரிடம் அவனைக் கொண்டு செல்ல விரைந்து செயல்பட்டார்.

அங்கு சென்றதும் மருத்துவர் தமது தோள் மீது சுமத் தப்பட்ட பொறுப்பாக உணர்ந்து அவனை நல்ல முறை யில் கவனிக்க ஆரம்பித்தார். உபகாரம் செய்ய வந்த அந்த மனிதரோ அவனது தலைக்கருகே நின்று கொண்டு, அவனது மூச்சு விட்டுவிட்டு வருவதையும் அவனது நெஞ்சு அடைப்பதையும் கவனித்துக் கொண்டிருந்தார். அவர் எந்த நோக்கத்துக்காகப் புறப்பட்டு வந்தாரோ அந்தப் பயணத்தை மறந்தே போனார். உலகத்தைப் புறந்தள்ளி விட்டு, பிரியப்போகின்ற ஒரு உயிரைக் காப் பாற்றி, அல்லாஹ்வின் அனுமதியுடன் அந்த உயிரை உரியவரிடம் மீட்டுவதற்கு முன்வந்தார். இவ்வாறு அவர் முன்வந்ததற்குக் காரணம், அந்த இளைஞனின் முன் அறிமுகத்திற்காகவோ, உலக ஆதாயத்திற்காகவோ அல்ல. மாறாக உபகாரம் செய்வதை அவர் விரும்பிய

காரணத்திற்காகத்தான். அத்தகையதொரு சந்தர்ப்பத்தை அல்லாஹ்வே அவருக்கு வழங்கியிருந்தான்.

அந்த இளைஞனை தம் கண்களால் உற்று நோக்கிக் கொண்டு அவனைக் கவனித்துக் கொண்டே இருந்தார் அந்த மனிதர். “அல்லாஹ் அந்த இளைஞனுக்கு நலம் அருள வேண்டும்; அவனது வாழ்க்கையை அவனுக்குத் திரும்பக் கொடுக்க வேண்டும்” என அவரது நாவு அவனுக்காக பிரார்த்தித்துக் கொண்டே இருந்தது. பிறகு அவனது உடல் நிலை படிப்படியாக முன்னேற்றம் அடைந்து அவனது மூச்சு சீர் நிலைக்குத் திரும்பியதை அந்த மனிதர் செவியேற்றார். அவன் ஆபத்தான கட்டத் தைத் தாண்டிவிட்டான். அவனது அவையங்கள் அசையத் தொடங்கின. கண்களில் உயிரின் ஒளி மினுமினுக்க ஆரம்பித்தது. உபகாரம் செய்ய வந்தவரோ மருத்து வரின் முகத்தில் நம்பிக்கையையும் புன்சிரிப்பையும் எதிர்பார்த்தவாறு அவரை உற்று நோக்கினார்.

நேரம் மெல்ல மெல்ல நகர்ந்தது. உம் இறைவனின் அருள் உபகாரம் செய்வோருக்கு அருகில் உள்ளது எனும் இறைவாக்கு மெய்யானது. அந்த இளைஞனின் உறுப்புக்களின் இணைப்புகளில் உயிர் படர ஆரம்பித்தது. மருத்துவரின் முகத்தில் மகிழ்ச்சி ரேகைகள் மின்ன ஆரம்பித்தன. இந்த நேரத்தில் உபகாரம் செய்ய வந்த அந்த மனிதருக்கு அந்த நோயாளியின் வீட்டு போன்

நம்பர் அவரிடமிருந்தே கிடைத்தது. உடனே தான் செய்ய வந்த நற்காரியத்தை வெற்றியுடனும் விவேகத்துடனும் நிறைவு செய்வதற்காக மருத்துவமனையில் இருந்து யாருக்கும் தெரியாதவாறு வெளியே வந்து நோயாளியின் வீட்டாருக்கு போன் செய்து அவர்களது மகன் பற்றிய தகவலையும் தற்போது அவன் இருக்கும் இடத்தையும் தெரிவித்தார்.

அப்போது அந்த உரையாடலில்...

எதிர் முனையில்: ஆனால், நீங்கள் யார் பேசுகிறீர்கள்? அல்லாஹ் உங்களுக்கு உதவி செய்வானாக! தாங்கள் யார்? உபகாரம் செய்பவரே! தாங்கள் யார்? தங்கள் பெயரைக் கூறுங்களேன். உங்கள் பெருந்தன்மையை மக்களிடம் எடுத்துரைக்க எங்களை அனுமதியுங்கள். உங்களது நற்செயலை அவர்களிடம் எடுத்துச் சொல்ல விடுங்கள். தாங்கள் செய்த நற்செயலுக்கு நாங்கள் உங்களுக்கு ஏதேனும் கைமாறு செய்ய அனுமதியுங்கள். நாங்கள் உங்களுக்கு என்ன கைமாறு செய்ய முடியும்? அல்லாஹ்வின் உதவியால் எங்கள் மகனுக்கு உயிர் திரும்புவதற்கு நீங்கள் பெரிதும் காரணமாக இருந்திருக்கிறீர்கள். உங்களை கண்ணியப்படுத்தி உபகாரம் செய்யும் பாக்கியம் எங்களுக்கு இல்லையா?

“நான் உபகாரம் செய்யும் ஒருவன்! அவ்வளவுதான்.” இந்த நான்கு வார்த்தைகளைத்தான் உபகாரம் செய்ய

வந்த அந்த மனிதர் கூறினார்- (தான் செய்த) அந்த நற்செயலுக்கான கூலியை அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்விடத்தில் எதிர்பார்த்தவாறு!

கவனத்தில் கொள்க! உபகாரம் செய்ய வந்தவரே! உமக்கு அருள்பாலிக்கப்படட்டும்! இந்த நன்மையே உமக்குப் போதுமாகும். நீர் நேரிய வழியில் அடி எடுத்து வைத்துவிட்டீர்! அனைத்துத் தீங்கிலிருந்தும் அல்லாஹ் உம்மைப் பாதுகாப்பானாக! உமது வாழ்க்கையிலும் ஆரோக்கியத்திலும் உமது சந்ததியிலும் அல்லாஹ் உமக்கு அபிவிருத்தியை வழங்குவானாக! எமக்கும் உமக்கும் ஒதுங்குமிடமாக சொர்க்கத்தை ஆக்கியருள் வானாக!

அந்த அறிஞர் கூறினார்: உபகாரம் செய்ய வந்த அந்த மனிதரின் நற்செயலை நினைத்துப் பார்ப்பதற்கு மக்க ளுக்கு சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் அவருக் காக அல்லாஹ்விடம் அவர்கள் கை ஏந்திப் பிரார்த் தித்துக் கொண்டிருந்தனர்.

இது தன் சகோதரனுக்காக அவர் நிறைவேற்றிய ஒரு தேவையாகும். என்ன தேவை அது? அதுதான் அந்த சகோதரனின் இதயத்தில் இருந்த மூச்சு! இந்த புத்திசாலி மனிதர் தன் சகோதரனைக் காப்பாற்றிய பிறகு வேறு என்ன பூரண பாக்கியத்தை அடைந்திட

முடியும்? அவனுக்கு உதவி செய்து அவர் சென்ற பாதை தான் எத்தகைய வெற்றிக்குரியது? அந்த வெற்றியைப் பற்றித்தான் அல்லாஹ் பின்வருமாறு கூறியுள்ளான்:

﴿يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا ارْكَعُوا وَاسْجُدُوا وَاعْبُدُوا رَبَّكُمْ وَافْعَلُوا الْخَيْرَ لَعَلَّكُمْ تُفْلِحُونَ﴾ [الحج:٧٧]

நம்பிக்கை கொண்டோரே! ருகூஃ செய்யுங்கள், சுஜூது செய்யுங்கள், உங்கள் இறைவனை வணங்குங்கள், நன்மையைச் செய்யுங்கள், நீங்கள் வெற்றி பெறுவீர்கள். (அல்குர்ஆன் 22:77)

சகோதரர்களே! உங்கள் சகோதரர்களுக்காக ஏதேனும் ஒரு தேவையை நிறைவேற்றுவதற்குத் தயங்காதீர்கள். உங்கள் நேரத்தையோ உழைப்பையோ செலவழித்தேனும் அதனை நிறைவேற்றுங்கள். உங்கள் இறைவனை முழுமையாக நம்புங்கள்! உங்கள் தேவையை அவன் நிறைவேற்றுவான். உங்கள் கவலையை எளிதாக்கி உங்கள் துயரத்தை நீக்குவான். மேலும் உங்கள் வாழ்வாதாரத்தில் வளம் ஏற்படச் செய்வான். ஏனெனில் "தன் சகோதரனின் தேவையை யார் நிறைவேற்றுகிறாரோ அவரின் தேவையை அல்லாஹ் நிறைவேற்றுவான்" என நபி(ஸல்) கூறியுள்ளார்கள். (புகாரி 2442)

((صَنَائِعُ الْمَعْرُوفِ تَقِي مَصَارِعَ السُّوءِ)) (طب كبير ٧ / ٣٠٠)

"செய்யும் உபகாரங்கள் தீங்குகள் நேராமல் பாது

காக்கும்” எனவும் நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (தப்ரானி கபீர்- பாகம் 7, பக்கம் 300) “ஒரு மனிதனுக்கு அவரது வாகனத்தில் ஏறி அமர நீ உதவுவதும், அல்லது அவரது பயணச் சுமைகளை அதில் ஏற்றி விடுவதும் தர்ம மாகும்” என்றும் நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (புகாரி 2989, முஸ்லிம் 1009)

இதோ இந்த வீரரின் கதையையும் கேளுங்கள். காவல் துறை துணைக் கண்காணிப்பாளரான அவர் காமிதி குடும்பத்தைச் சேர்ந்தவர். அவரது பெயர் ஜும்ஹூர் இப்னு அப்தில்லாஹ். அரை நிலவு கடற்கரையில் (Half Moon Beach) ஒரு தந்தையையும் அவரது இரண்டு குழந்தை களையும் நீரில் மூழ்குவதிலிருந்து காப்பாற்றும் பாக்கி யத்தை அல்லாஹ் அவருக்கு அருளினான். எவ்வாறெ னில் அஸர் தொழுகையை நிறைவேற்றுவதற்காக அவர் பள்ளிவாசலுக்குச் சென்று கொண்டிருந்த வழியில் ஓர் அபயக் குரலைச் செவியேற்றார். அப்போது மனசாட்சி யின் அழைப்புக்கும் நன்மையின் அழைப்புக்கும் பதில ளிப்பதற்கு ஒரு நிமிடம்கூடத் தாமதிக்கவில்லை. கடலில் மூழ்கப்போகின்ற மூன்று உயிர்களைக் காப்பாற்றும் முயற்சியில் கடல் அலைகளைக் கிழித்துக் கொண்டு செல்லலானார்.

முதலில் அவரால் அவர்களது தந்தையைக் காப்பற்ற முடிந்தது. கரைக்கு அருகே ஒரு இடத்தில் அவரைக்

கொண்டு வந்து சேர்த்தார். அங்கு நிற்கும் அவரது நண்பர் அவரைப் பாதுகாப்பாக கரை சேர்ப்பது அவரது பொறுப்பாகும். பிறகு உடனடியாக அவர் உதவிக் கரம் நீட்டுவதற்காக மிதமிஞ்சிய துணிச்சலுடனும் இணையில் லாத் தியாக உணர்வுடனும் அந்த இரு குழந்தைகளைக் காப்பாற்றுவதற்காகச் சென்றார். அவர்களைக் காப்பாற்று வதற்காக தம் உயிரையும் வாழ்வையும் துச்சமாக மதித்து, ஒரு தந்தையைப் போன்று அவர்களிடம் பரிவு காட்டி, கருணையுடன் அவர்களை வெடுக்கென்று தூக்கி னார். (அவ்விருவரையும் அவரது நண்பர் பாதுகாப்பாக கரை சேர்த்தார்.) இவ்வாறாக அவ்விருவரையும் காப் பாற்றும் பாக்கியத்தை அல்லாஹ் அவருக்கு அளித்தான்.

ஆனால் அந்த நேரத்தில் அவர் பாதுகாப்பாக கரைக்கு வந்து சேர அவரது பலம் அவருக்கு ஒத்துழைக்க வில்லை. கடுமையான களைப்பை உணர்ந்தார். கடல் அலையின் சுழற்சியில் சுயகட்டுப்பாட்டை இழந்தார். அலைகள் அவரை உள்ளுக்குள் இழுத்தன. அவரது சக்தி தளர்ந்தது. கொஞ்சம் கொஞ்சமாக அவரது கண் களில் வாழ்வின் ஒளி மங்கத் தொடங்கியது. அல்லாஹ் வின் பாதையில் உயிர்த்தியாகம் செய்வதுதான் அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்த கௌரவமாக இருந்தது. நாமும் அவ்வாறே கருதுகிறோம். அதற்கு அல்லாஹ் போதுமானவன். அந்த வீரர் மக்களின் பார்வையை விட்டும் மறைந்துவிட்டார்.

ஆம்! அவர் தமது வீரத்தால் தியாகம் மற்றும் அர்ப்ப ணிப்பின் மிகச் சிறந்ததோர் சித்திரத்தை வரைந்து விட்டு பிறகு கடலின் ஆழத்தில் மூழ்கிப் போனார். உண்மையில் இது நமது காலத்தில் நல்லதொரு முன்னுதாரணமும் ஈடு இணையற்ற வீரமுமாகும். ஆயினும் ஜும்ஹுரே! அல்லாஹ் உமக்கு விசாலமான அருளைப் பொழி வானாக! அவனுடைய விசாலமான சொர்க்கத்தில் உம்மைக் குடியமர்த்துவானாக! நல்லலோர்கள் மற்றும் உயிர்த்தியாகிகளின் இடத்தில் உம்மைத் தங்க வைப் பானாக! திண்ணமாக அவன் உபாகரம் செய்பவன், நிகரற்ற அன்பும் பரிவும் உடையவன்!

உங்கள் சகோதரனின் தேவை: அவனது கவலையை நீங்கள் தணிப்பது, நீங்கள் அவனுக்குச் செய்கின்ற உதவி, அவன் மீதுள்ள கடனை நீங்கள் நிறை வேற்றுவது, அவனுக்குக் கடன் கொடுத்து உதவுவது, அவனது தன்மானத்திற்குப் பங்கம் நேராமல் தடுப்பது, அவனிடம் நீங்கள் கொள்ளும் தோழமை, அவன் இல்லாத இடத்தில் அவனுக்காக நீங்கள் செய்யும் பிரார்த்தனை, புண்ணியத்திற்காகச் செய்யும் ஒவ்வொரு உதவி, நன்மையை நாடிச் செய்யும் ஒவ்வொரு ஒத்து ழைப்பு, அல்லாஹ்வின் நேசத்தை அடைவதற்காகச் செய்யும் நல்லுபகாரங்கள். இவற்றின் மூலம் அல்லாஹ் வின் திருவுவப்பை நீங்கள் வென்றெடுப்பீர்கள்.

## பூங்கா 3.
## அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்தல், தான தர்மம் செய்தல்

அன்பிற்குரியவர்களே! யார் மனமுவந்து, ஆத்ம திருப்தியுடன் தான தர்மங்களை தாரளமாகச் செய்கின்றாரோ அவருக்கு இறைவனின் வாக்குறுதியும், பன்மடங்கு நன்மையும், கண்ணியமான நற்கூலியும், சொர்க்கச் சோலைகளும் உண்டு. அவற்றின் உணவுகளும் நிழல்களும் நிரந்தரமானது. இத்தகையோருக்கு கண்ணியமான வாக்குறுதிகளை அள்ளித் தருகின்ற வசனங்கள் திருக்குர்ஆனில் ஏராளம் உள்ளன.

﴿ مَنْ ذَا الَّذِي يُقْرِضُ اللهَ قَرْضًا حَسَنًا فَيُضَاعِفَهُ لَهُ وَلَهُ أَجْرٌ كَرِيمٌ ﴾

அல்லாஹ்வுக்கு யாரேனும் அழகிய கடன் வழங்கினால் அதை அவருக்கு அவன் பன்மடங்காக வழங்குவான். அவருக்கு கண்ணியமான நற்கூலியும் உண்டு. (57:11)

﴿ الَّذِينَ يُنْفِقُونَ أَمْوَالَهُمْ بِاللَّيْلِ وَالنَّهَارِ سِرًّا وَعَلَانِيَةً فَلَهُمْ أَجْرُهُمْ عِنْدَ رَبِّهِمْ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُونَ ﴾ [البقرة:٢٧٤]

தமது செல்வங்களை இரவிலும், பகலிலும், இரகசியமாகவும், வெளிப்படையாகவும் (நல்வழியில்) செலவிடுவோருக்கு தமது இறைவனிடம் அவர்களுக்கான கூலி உண்டு. அவர்களுக்கு எந்த அச்சமும் இல்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். (2:274)

தர்மம் என்பது பொங்கி வரும் ஊற்றாகும். அதன் ஓட்டம் அழுக்குகள் மற்றும் தடைகள் அனைத்தையும் அரித்துவிடுகிறது. நன்மையின் வகைகளில் இறைவழி யில் செலவு செய்தல் என்பது பெரும் பிணிகளுக்கு நிவாரணமாக அமைகிறது. இரகசியமாக தர்மம் செய்வது செல்வத்திற்கு அபிவிருத்தியாகும். இதனை வானம் மற்றும் பூமியின் இறைவன் வாக்களித்துள்ளான்.

“(நபியே!) கூறுவீராக! எனது இறைவன் தனது அடியார்களில் தான் நாடியோருக்குச் செல்வத்தைத் தாராளமாக வழங்குகிறான். தான் நாடியோருக்கு அதைக் குறைத்தும் கொடுக்கிறான். நீங்கள் எப்பொ ருளை (நல்வழியில்) செலவு செய்தாலும் அவன் அதற் கான பிரதிபலனை அளிப்பான். அவன் வழங்குவோரில் சிறந்தவன்!” (அல்குர்ஆன் 34:39)

நல்லுபகாரம் செய்பவர்களே! நீங்கள் செய்யும் தர்மம் இப்பூவுலகிற்கு வந்தவர்களில் மிகச் சிறந்தவரான நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விதைத்த விதையாகும்.

((فَلَرَسُولُ الله ﷺ أَجْوَدُ بِالْخَيْرِ مِنْ الرِّيحِ الْمُرْسَلَةِ)) (خ/ ٦)

“அல்லாஹ்வின் தூதரவர்கள் தொடர்ந்து அனுப் பப்படும் காற்றை விட (வேகமாக) நல்வழியில் வாரி வழங்கும் வள்ளலாகத் திகழ்ந்தார்கள்.” (புகாரி 6)

இப்போது நாம் இப்பூங்காவின் மலர்களில் ஒன்றின் அருகே சென்று அதன் இதழ்களில் பின் வரும் நிகழ்வைப்

படிப்போம். வெள்ளை நிறப் படுக்கைகள் போடப்பட்ட ஓர் அறையில் (மருத்துவமனையில்) நடுத்தரமான படுக் கையில் - முற்றிலும் சுயநினைவிழந்து, தன்னைச் சுற்றி இருக்கின்ற- இதயத் துடிப்பையும் உயிர் மூச்சையும் கண்காணிக்கின்ற கருவிகள், மருத்துவப் பரிசோதனைக் குழாய்கள் எதையும் உணராமல் ஒரு மனிதன் தூங்கிக் கொண்டிருந்தான். அவருடைய மனைவியோ அவர்களது பதினான்கு வயது பிள்ளையுடன் ஒரு வருடத்திற்கும் மேலாக தினமும் இடைவிடாமல் அவரைச் சந்தித்துக் கொண்டிருந்தார். அவர்கள் இருவரும் அவரைப் பரிவு டனும் பாசத்துடனும் பார்ப்பார்கள். அவரது ஆடைகளை மாற்றிவிடுவார்கள். அவரது நிலைமைகளைக் கண்கா ணிப்பார்கள். மேலும் அவரைப் பற்றி மருத்துவர்களிடம் (அடிக்கடி) விசாரிப்பார்கள். அவரைப் பற்றி புதிய செய்தி ஒன்றுமிருக்காது. அவரது நிலைமை எப்போதும் போன்று தான் இருக்கும். அவரது உடல் நிலையில் எந்த முன் னேற்றமும் எந்தப் பின்னடைவும் இருக்காது. முற்றிலும் சுயநினைவற்ற நிலை! அவர்களுக்கு அவர் குணம் அடைவார் என்ற நம்பிக்கை போய் விட்டது. அல்லாஹ் அவரைக் குணப்படுத்தினாலே தவிர. ஆனாலும் பொறுமை மிகுந்த இந்தப் பெண்மணியும் இளம் வயதுச் சிறுவனும் அவரை விட்டுவிடவில்லை. அவர் குணமடைய வேண்டும் என்பதற்காக அல்லாஹ்விடம் தமது கைகளை ஏந்தி பணிந்து பிரார்த்தித்துக் கொண்டே இருந்தார்கள்.

அவர்களின் பிரார்த்தனை இவ்வாறு இருந்திருக்கலாம்.

ஒவ்வொரு நிகழ்வின் போதும் நீ தானே
அழைக்கப்படுகின்றாய்!
சக்தியில்லாதோருக்கு நீ தானே புகலிடம்!
துன்பத்தில் ஆட்பட்டோரை இரட்சிப்பது நீ தானே!
பாதை தவறியோருக்கு வழிகாட்டியும் நீ தானே!

பிறகு அவர்கள் மருத்துவமனையை விட்டும் புறப்பட்டார்கள். அன்றைய தினம் மீண்டும் அவரை சந்திக்க வர வேண்டும் என்பதற்காக! இவ்வாறக சுயநினைவின்றி கிடக்கும் அந்த மனிதரை தினமும் இடைவிடாமல் சலிப்பும் சோர்வும் இன்றி சந்தித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களது உள்ளங்கள் அந்த மனிதரை நேசிப்பதிலும் அவரிடம் உண்மையாக நடந்து கொள்வதிலும் ஒன்றிணைந்து விட்டன. மேலும் அவர்களது உள்ளங்கள் துன்பங்களின்போது அழகிய பொறுமையையும் பரிவையும் இரக்கத்தையும் வெளிப்படுத்தின.

உயிரற்றவரைப் போல் கிடக்கின்ற அந்த மனிதரை இந்தப் பெண்மணியும் அவரது மகனும் பார்க்க வருவது குறித்து அந்த மருத்துவமனையில் உள்ள இதர நோயாளிகள், செவிலியர்கள், மருத்துவர்கள் எல்லாம் மிகவும் ஆச்சரியப்பட்டனர். இத்தனைக்கும் அந்த நோயாளியின் வாழ்வில் புதிய முன்னேற்றம் ஏதும் இல்லாமலிருந்தது. என்னே ஆச்சரியம்! இந்த நோயாளியை திரும்பத்

திரும்ப ஒரு நாளைக்கு இரு முறை பார்க்க வருவதில் இவர்களின் இந்தப் பிடிவாதம் என்னே வியப்பாக உள் ளது! ஆடையால் பொதியப்பட்ட இந்த நோயாளியோ தன்னைச் சுற்றி என்ன நடக்கின்றது என்பதையே உணரா மலிருக்கின்றார். இவரைப் பார்க்க வருவதில் எந்தப் பலனும் இல்லை என்பதை மருத்துவர்களும் அவர்களது உதவியாளர்களும் அந்தப் பெண்மணிக்கும் அவரது மகனுக்கும் மிகத் தெளிவாக எடுத்துக் கூறிவிட்டனர். ஆயினும் அவர்கள் மீது இரக்கம் கொண்டு வாரத் திற்கு ஒரு முறை பார்த்துச் செல்லுமாறு அவர்களை விட்டு விட்டனர். இரக்கமுள்ள அந்தப் பெண்மணியோ "அல்லாஹ் போதுமானவன், அல்லாஹ் போதுமானவன்" என்ற வார்த்தையையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

ஒரு நாள் இந்தப் பெண்மணியும் அவரது மகனும் அந்த நோயாளியைப் பார்க்க வருவதற்கு சிறிது நேரத் திற்கு முன் ஆச்சரியமான ஒரு விஷயம்- உணர்ச்சிப் பூர்வமான ஒரு நிகழ்வு நடந்தது. அதாவது நோயுற்ற அந்த மனிதர் அவரது கட்டிலில் அசையலானார். வலது புறமும் இடது புறமும் புரள ஆரம்பித்தார். இதெல்லாம் சில நொடிகளில் நடந்தது. அந்த மனிதர் தனது கண் களைத் திறந்தார். பிராணவாயு (ஆக்ஸிஜன்) செலுத்தும் கருவியை தன்னை விட்டும் அப்புறப்படுத்தி விட்டு சீராக அமர்ந்து கொண்டார். பிறகு அங்கு இவரைக் கண்டு

திகைத்திருப்போர் அமர்ந்திருக்க அவர்களுக்கு மத்தியில் செவிலியரை அழைத்து தன் அருகே உள்ள மருத்துவச் சாதனங்களை அகற்றும்படி வேண்டினார். அதனை மறுத்த செவிலியர் மருத்துவரை அழைத்தார். மருத்து வரும் மிகவும் திகைப்பில் ஆழ்ந்திருந்தார். பிறகு அந்த மனிதருக்கு அவர் உடனடியான பரிசோதனையை மேற் கொண்டபோது அந்த மனிதன் பூரண நலத்துடன் இருப் பதைக் கண்டார். மருத்துவச் சாதனங்களை அப்புறப்ப டுத்தும்படி வேண்டிக் கொண்டார். நோயாளியின் உடலில் அச்சாதனங்கள் பொருத்தப்பட்ட இடங்களையும் சுத்தம் செய்யும்படி கேட்டுக் கொண்டார்.

அந்த மனிதனின் வாய்மை மிக்க மனைவி வழக்க மாகப் பார்க்க வரும் நேரம் நெருங்கியது. அவளும் அவளது மகனும் அவர்களுக்குப் பிரியமான அந்த நோயாளியிடம் வந்தனர். பாசம் நிறைந்த அந்த நிமிடங் களை உங்களுக்கு எப்படி நாம் வர்ணிப்பது?! எந்த வர்த்தைகளால் வடிப்பது? அங்கே பார்வைகள் பரஸ் பரம் பரிமாரப்பட்டன! கண்ணீர் கண்ணீருடன் கலந்தது! புன்னகைகள் உதடுகளில் தடுமாறின. உணர்வுகள் நாவு களை ஊமையாக்கின. ஆனாலும் அவை அல்லாஹ்வின் புகழையும் கீர்த்தியையுமே ஓதின. அவன் கண்ணிய மிக்கவன், அருட்பாக்கியங்களை வழங்குபவன், பேருப காரம் செய்பவன், (பிரார்த்தனைகளுக்குப்) பதிலளிப் பவன்! அவனே அவளது கணவனுக்கு ஆரோக்கியம்

எனும் பாக்கியத்தை நிறைவு செய்தவன்!

நன்மை செய்பவர்களே! இச்சம்பவம் இன்னமும் முற்றுப் பெறவில்லை. இச்சம்பவத்தில் ஓர் இரகசியம் இன்னமும் இருந்து கொண்டே இருக்கிறது. அதை வெளிக் கொணராமல் மருத்துவரால் பொறுமையாக இருக்க முடியவில்லை. அந்தப் பெண்மணியை நோக்கி அவர் கேள்விக் கணைகளைத் தொடுத்தார்.

“ஒரு நாள் இவரை இப்போதுள்ள இந்த நிலையில் காண்பீர்கள் என்று நீங்கள் எதிர்பார்த்ததுண்டா?”

அவள்: “ஆம்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! ஒரு நாள் நான் அவரிடம் வருவேன்; அப்போது அவர் எங்களை எதிர் பார்த்தவாறு அமர்ந்திருப்பதை நான் காண்பேன் என்று எதிர்பார்த்தேன்.”

மருத்துவர்: “ஏதோ ஒன்று நடந்திருக்கிறது. அதில் மருத்துவமனைக்கோ மருத்துவர்களுக்கோ எந்தப் பங்கும் கிடையாது. அல்லாஹ்வின் பெயரால் கேட்கி றேன் கூறுங்கள்; நீங்கள் எதற்காக தினமும் இரண்டு முறை வந்தீர்கள்? என்ன செய்தீர்கள்?”

அவள்: “தாங்கள் அல்லாஹ்வின் பெயரால் என்னிடம் கேட்டதனால் சொல்கிறேன். ஆரம்பத்தில் நான் என் கணவரை வந்து பார்த்துக் கொண்டிருந்தது ஒரு திருப் திக்காகவும் அவருக்காக பிரார்த்தனை செய்வதற்கா கவும்தான். பிறகு அவர் குணம் அடைய வேண்டும்

என்பதற்காக அல்லாஹ்வின் திருப்தியை நாடி நானும் எனது மகனும் ஏழைகளிடமும் வறியவர்களிடமும் சென்று அவர்களுக்கு தானதர்மங்களை வழங்கி வந்தோம்...

அவளுடைய எதிர்பார்ப்பையும் பிரார்த்தனையையும் அல்லாஹ் வீணாக்கிவிடவில்லை. அவளுடைய இறுதி சந்திப்பில் அவள் தனது கணவருடன் வீட்டிற்குப் புறப் பட்டாள். அவர் திரும்பி வருவதை நெடுநாட்களாக எதிர் பார்த்துக் கொண்டிருந்தது அந்த வீடு! அந்த வீட்டிற்கும் அவருடைய குடும்பத்தாருக்கும் சிரிப்பும் மகிழ்ச்சியும் திரும்ப வேண்டும் என்பதற்காக.

இப்பூங்காவின் இந்தப் பழம் எவ்வளவு கனிந்தது! என்னே ருசியானது!! “தமது செல்வங்களை இரவிலும், பகலிலும், இரகசியமாகவும், வெளிப்படையாகவும் (நல் வழியில்) செலவு செய்வோருக்கு அவர்களது இறை வனிடம் அவர்களுக்கான கூலி உண்டு. அவர்களுக்கு எந்த அச்சமும் இல்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.” (அல்குர்ஆன் 2:274)

இந்தச் சம்பவத்தை கண்ணியத்திற்குறிய பேராசிரியர் அஹ்மத் ஸாலிம் என்பவர் “நம்பிக்கை இழந்துவிடாதீர்” என்ற தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். அல்லாஹ் அவருக்கு அருள் புரிவானாக! மேலும் நம் சார்பாக அவருக்கு நற்கூலியை வழங்குவானாக!

அல்லாஹ்வின் அருள் மகத்தானதாகும். அவன் கூறுகிறான்: “நீங்கள் விரும்புவதை (இறைவழியில்) செலவிடாத வரை நன்மையை அடைந்து கொள்ள மாட்டீர்கள்.” (3:92) இறைவழியில் செலவு செய்வதற்கான வழிகளையும் இடங்களையும் இப்போது ஆராய்வோம். இறைவழியில் செலவு செய்வதற்கான மிக முக்கியமான இடம் அல்லாஹ்வின் திருப்தியைத் தேடும் எண்ணத்தில் குடும்பத்தாருக்கும் உறவினர்களுக்கும் செலவு செய்வதுதான்.

عَنْ أُمِّ سَلَمَةَ قُلْتُ يَا رَسُولَ اللهِ هَلْ لِي مِنْ أَجْرٍ فِي بَنِي أَبِي سَلَمَةَ أَنْ أُنْفِقَ عَلَيْهِمْ وَلَسْتُ بِتَارِكَتِهِمْ هَكَذَا وَهَكَذَا إِنَّمَا هُمْ بَنِيَّ قَالَ نَعَمْ لَكِ أَجْرُ مَا أَنْفَقْتِ عَلَيْهِمْ

(خ/ ٥٣٦٩)

இதோ உம்மு ஸலமா(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, “அல்லாஹ்வின் தூதரே! (என் கணவர்) அபூஸலமாவுடைய மக்களுக்காக நான் செலவு செய்வதால் எனக்கு கூலி உண்டா? அவர்களை நான் இப்படியே விட்டுவிடப்போவதில்லை. அவர்கள் என் பிள்ளைகள்” என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “ஆம்! அவர்களுக்கு நீ செலவு செய்த கூலி உனக்கு உண்டு” என்று கூறினார்கள். (புகாரி 5369)

நாம் நம் மனைவியருக்கும் நம் பிள்ளைகளுக்கும் செலவு செய்யாமல் ஒரு நாளேனும் கழிந்ததுண்டா?!

ஆயினும் இச்செயலை அகில உலகத்தின் இரட்சகனி டமிருந்து நற்கூலியை எதிர்பார்த்துச் செய்வது அவசிய மாகிறது. ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்.

(( إِنَّكَ لَنْ تُنْفِقَ نَفَقَةً تَبْتَغِي بِهَا وَجْهَ اللهِ إِلَّا أُجِرْتَ عَلَيْهَا حَتَّى مَا تَجْعَلُ فِي فَمِ امْرَأَتِكَ)) (خ/ ٥٦)

“அல்லாஹ்வின் திருமுகத்தை நாடி நீ எதைச் செலவு செய்தாலும் அதற்காக நீ கூலி வழங்கப்படுவாய். உனது மனைவின் வாயில் நீ ஊட்டுகின்ற ஒரு கவளம் உணவு உட்பட.” (புகாரி 56)

உனது உணவில் அல்லாஹ் அபிவிருத்தி ஏற்படுத் தினால் நீ உனக்கும் உன் ஊரிலும் வெளியூரிலும் உள்ள உனது சகோதரர்களுக்கும் செலவு செய்வதில் கஞ்சத்தனம் செய்யாதே. குடும்பத்தாருக்கு செலவு செய்வது அபிவிருத்தி நிறைந்தது. குறைவாகச் செலவு செய்தாலும் சரி. அதிகமாகச் செலவு செய்தாலும் சரி.

குறைவாகச் செலவு செய்வதைப் பொறுத்தவரை அது குறித்து ஒரு பள்ளிவாசலின் இமாம் எனக்குக் கூறியதே நினைவுக்கு வருகிறது. அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்வதற்கு அழைக்கும்போது அதற்கு விரைந்து பதிலளித்த - பள்ளிவாசலைச் சுத்தம் செய்யும் ஓர் ஏழைத் தொழிலாளி விஷயம் அவருக்கு மிகவும் ஆச்சரியமாக

இருந்தது. அவர் வறியவராகவும் ஏழையாகவும் இருந்தும் கூட அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்வதில் அவருக்கு எந்தத் தடுமாற்றமும் இருந்ததில்லை. மாறாக அவர் ஒவ்வொரு முறையும் தன்னால் இயன்ற அளவு ஒரு ரியால் அல்லது அரை ரியால் அல்லாஹ்வின் வழியில் செலவு செய்வார்.

அரை ரியால்தானா என நீங்கள் அற்பமாக எண்ணி விட வேண்டாம்! ஏனெனில் அல்லாஹ்விடத்தில் அவனது உதவியால் அதற்கு மகத்தான அந்தஸ்து- கூலி உண்டு. ஏன் என்று உங்களுக்குத் தெரியுமா? ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்.

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ تَصَدَّقَ بِعَدْلِ تَمْرَةٍ مِنْ كَسْبٍ طَيِّبٍ وَلَا يَقْبَلُ اللهُ إِلَّا الطَّيِّبَ وَإِنَّ اللهَ يَتَقَبَّلُهَا بِيَمِينِهِ ثُمَّ يُرَبِّيهَا لِصَاحِبِهِ كَمَا يُرَبِّي أَحَدُكُمْ فَلُوَّهُ حَتَّى تَكُونَ مِثْلَ الْجَبَلِ (خ/ ١٤١٠، م/ ١٠١٤)

“அல்லாஹ் தூய்மையானதைத் தவிர வேறு எதையும் ஏற்க மாட்டான் என்பதால் யாரேனும் தூய்மையான உழைப்பிலிருந்து ஒரு பேரீத்தம் பழத்தைப் போன்றேனும் தர்மம் செய்தால் அதை அல்லாஹ் தனது வலக் கரத் தால் வாங்கிக் கொண்டு, பிறகு நீங்கள் உங்கள் குதிரைக் குட்டியை வளர்ப்பதுபோல தர்மம் செய்த வருக்காக அல்லாஹ் அதன் நன்மையை மலைபோல உயரும் அளவுக்கு வளர்த்துவிடுவான்” என நபி(ஸல்)

அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரி (1410), முஸ்லிம் (1014)

அவர் கொடுத்தது அரை ரியால்தான். ஆனால் அது கொழுந்துவிட்டு எரியும் நரக நெருப்பிலிருந்து அல்லாஹ்வின் உதவியால் அவரைக் காக்கக்கூடியதாக மாறிவிடுகிறது. அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறியதை என்னுடன் நீங்களும் எண்ணிப் பார்க்க வேண்டாமா!

عَنْ عَدِيَّ بْنَ حَاتِمٍ عن النبي ﷺ يَقُولُ اتَّقُوا النَّارَ وَلَوْ بِشِقِّ تَمْرَةٍ (خ/ ١٤١٧)

“பாதி பேரீத்தம் பழத்தையேனும் தர்மம் செய்து நரகத்திலிருந்து உங்களைக் காத்துக் கொள்ளுங்கள்!” என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அதீ இப்னு ஹாதிம்(ரலி), நூல்: புகாரி 1417

இப்போது நாம் ஈகைக் குணம் நிறைந்த ஒரு காட்சியைக் காண்பதற்காக தர்மஸ்தாபனம் ஒன்றிற்குச் செல்வோம். பெருநாள் இரவு அன்று பத்து வயதைத் தாண்டிராத சிறுவன் ஒருவன் நன்கொடைகளை சேகரிக்கும் பொறுப்பிலுள்ள ஒரு பணியாளரிடம் சுமார் இரு நூறு ரியாலை கொடுத்தான். அவர் ஆச்சரியப்பட்டு அவனிடம் கேட்டார் “இந்தப் பணம் உனக்கு எங்கிருந்து கிடைத்தது? இதை நாம் என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறாய்? என்று.” அதற்கு அவன், “இந்தப் பணத்தை என்னுடைய தந்தை எனக்குப் பெருநாள் ஆடைகளை வாங்குவதற்காகத் தந்தார்; நான் இதன் மூலம் ஒரு

முஸ்லிம் அநாதைக்கு பெருநாள் புத்தாடை வாங்கிக் கொடுக்க விரும்புகிறேன்.” என்னைப் பொறுத்தவரை நான் அணிந்திரும் ஆடையே எனக்குப் போதுமானது” என்றான். என் அருமை குழந்தாய்! நீ வளர்ந்த அந்த வீட்டிற்கு, நீ பராமரிப்பு பெற்ற அந்த வீட்டிற்கு அல்லாஹ் அருள் புரிவானாக! இவ்வுலகிலும் மறுவுலகிலும் அந்த வீட்டின் கண் குளிர்ச்சியாக அல்லாஹ் உன்னை ஆக்கி யருள்வானாக!

அதிக அளவு தர்மம் செய்வதைப் பொறுத்தவரை அது குறித்து அனஸ் பின் மாலிக்(ரலி) அவர்கள் அறிவித்த நபிமொழிதான் நமக்கு நினைவுக்கு வருகிறது.

அனஸ்(ரலி) அவர்கள் அறிவிப்பதாவது: அபூதல்ஹா (ரலி) அவர்கள் மதீனாவில் அன்ஸாரிகளில் பேரீத்தம் தோட்டத்தைப் பெற்றிருந்த பெரும் செல்வந்தராக இருந் தார். அவருடைய செல்வங்களில் அவருக்குப் பிரிய மானது பைருஹா எனும் தோட்டம்தான். அத்தோட்டம் (நபியவர்களின்) பள்ளிவாசலுக்கு எதிரே இருந்தது. நபி (ஸல்) அவர்கள் அத்தோட்டத்திற்குச் சென்று அதன் சுவையான தண்ணீரை அருந்தி வருவார்கள். “உங்க ளுக்கு விருப்பமானவற்றை (இறைவழியில்) செலவழிக் காதவரை நீங்கள் நன்மையை அடைய முடியாது” (3:92) என்ற குர்ஆன் வசனம் அருளப்பட்டபோது அபூதல்ஹா (ரலி)அவர்கள் நபி(ஸல்)அவர்களிடம் வந்து, “அல்லாஹ் வின் தூதரே! “உங்களுக்கு விருப்பமானவற்றை (இறை

வழியில்) செலவழிக்காதவரை நீங்கள் நன்மையை அடைய முடியாது” என்று அல்லாஹ் கூறுகிறான். என்னுடைய செல்வங்களில் எனக்குப் பிரியமானது பைருஹா எனும் தோட்டம்தான். இதை அல்லாஹ்வுக்காக தானமாகத் தருகிறேன். இதன் நன்மையையும் இதன் பொக்கிஷத்தையும் அல்லாஹ்விடத்தில் எதிர்பார்க்கிறேன். அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் விரும்பும் வகையில் தாங்கள் இதனைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்” என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், “சபாஷ்! இது லாபகரமான செல்வம்! இது லாபகரமான செல்வம்! நீர் கூறியதை நான் கேட்டுக் கொண்டேன். ஆனால் இதனை நீர் உன் உறவினர்களுக்கு வழங்குவதையே நான் விரும்புகிறேன்” என்று கூறினார்கள். உடனே அபூதல்ஹா(ரலி) அவர்கள், “அல்லாஹ்வின் தூதரே! அவ்வாறே செய்கிறேன்” என்று கூறினார். பிறகு அவர் தமது உறவினர்களுக்கு அதனைப் பங்கிட்டுக் கொடுத்தார். (புகாரி 1461)

எனதருமைச் சகோதரர்களே! வானவர்கள் யாருக்காக இவ்வாறு பிரார்த்தனை செய்கிறார்களோ அவர்களில் ஒருவராக நீங்கள் இருங்கள்.

((اللَّهُمَّ أَعْطِ مُنْفِقًا خَلَفًا)) (خ/ ١٤٤٢، م/ ١٠١٠)

“இறைவா! (நல்வழியில்) செலவு செய்பவருக்கு நல்ல பகரத்தை வழங்குவாயாக!” என்று (வானவர்கள்) பிரார்த்திக்கிறார்கள். (புகாரி 1442, முஸ்லிம் 1010)

பாசத்திற்குரிய சகோதரர்களே! அல்லாஹ் யாருக்கு செலவு செய்கிறானோ அவர்களில் ஒருவாராய் இருங்கள்!

((قَالَ الله أَنْفِقْ يَا ابْنَ آدَمَ أُنْفِقْ عَلَيْكَ)) (خ/ ٥٣٥٢)

ஏனெனில் அல்லாஹ் கூறுவதாக நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: “ஆதமின் மகனே! (நல்வழியில்) செலவு செய். உனக்கு நான் செலவு செய்கிறேன்.” (புகாரி 5352)

பிரியத்திற்குரியவர்களே! “(நல்வழியில்) நீங்கள் செலவு செய்ததுதான் என்றைக்கும் நிலைத்திருக்கக் கூடியது; அழிந்து போகாதது! செலவு செய்யாமல் நீங்கள் தடுத்து வைத்திருப்பவையே அழிந்து போகக் கூடியது!” என்ற உறுதியுடன் இருங்கள்.

أنت للمال إذا أمسكته فإذا أنفقته فالمال لك

நீ (நல்வழியில்) செலவு செய்யாமல் செல்வத்தைத் தடுத்து வைத்திருந்தால் நீ அச்செல்வத்திற்குரியவன்!

அதனைச் செலவு செய்தாலோ அச்செல்வம் உனக் குரியது! (கவிதைவரி)

عَنْ عَائِشَةَ أَنَّهُمْ ذَبَحُوا شَاةً فَقَالَ النَّبِيُّ ﷺ مَا بَقِيَ مِنْهَا

قَالَتْ مَا بَقِيَ مِنْهَا إِلَّا كَتِفُهَا قَالَ بَقِيَ كُلُّهَا غَيْرَ كَتِفِهَا (ت/ ٢٤٧٠)

நபியின் குடும்பத்தினர் ஒரு ஆட்டை அறுத்தார்கள். “அதன் இறைச்சியில் ஏதேனும் மீதம் இருக்கிறதா?” என்று நபி(ஸல்)அவர்கள் கேட்டார்கள். அதற்கு ஆயிஷா(ரலி) அவர்கள் “(தர்மம் செய்தது போக) முன்னங்கால்

இறைச்சி மட்டுமே மீதம் இருக்கிறது” என்றார்கள். அதற்கு நபி(ஸல்)அவர்கள், “(இல்லை! தர்மம் செய்தது) எல்லாமே மீதம் இருக்கிறது, முன்னங்கால் இறைச் சியைத் தவிர!” என்றார்கள். அறிவிப்பவர்: ஆயிஷா(ரலி), நூல்: திர்மிதி 2470

(நல்வழியில்) நாம் செலவு செய்தது நிலைத்திருக் கக்கூடியது மட்டுமல்ல அது மென்மேலும் அதிகரித்துக் கொண்டே இருக்கும் ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் கூறி னார்கள்: தர்மம் செய்வது செல்வத்தைக் குறைத்துவிடு வதில்லை. (முஸ்லிம் 2588) ((مَا نَقَصَتْ صَدَقَةٌ مِنْ مَالٍ))

டாக்டர் காலித் பின் சவூத் அல்ஹுªலைபி என்கிற ஒரு மார்க்கப் பிரச்சாரகர் என்னிடம் கூறியதாவது: இந்த அழகான ஊரின் செல்வந்தர்களில் பெரும் வியாபாரி ஒருவர் அவரிடம், “அல்லாஹ்வின் வழியில் நான் எதைத் தர்மம் செய்தாலும் தர்மத்தின் அபிவிருத்தி மற்றும் அதன் சிறப்பின் காரணமாக அது அதிகரிப்பதை நான் கண் கூடாகப் பார்க்காமல் இருந்தது கிடையாது” என்று கூறினார்.

இந்த நபிமொழியைக் கேளுங்கள்! இது, இந்த அழகிய பூங்காவின் கனிகளில் ஒன்றை உங்களுக்கு (பறிப்பதற்கு ஏற்ற வகையில்) தாழ்த்தித் தரும்.

ஒரு மனிதர் வனாந்திரத்தில் சென்று கொண்டிருக்கும் போது “இன்னாருடைய தோட்டத்தில் மழை பொழியச்

செய்வாயாக!" என்று மேகத்தில் ஒரு சப்தத்தைக் கேட்டார். உடனே அந்த மேகம் நகர்ந்து பாறைகள் நிறைந்த ஓர் இடத்தில் தனது தண்ணீரைக் கொட்டியது. அங்கிருந்த ஓடைகளில் ஒன்று அந்த மழை நீர் முழுவதையும் உள் வாங்கிக் கொண்டது.

அந்த மனிதர் அத்தண்ணீரைப் பின்தொடர்ந்து சென்ற போது அங்கு ஒருவர் தன் தோட்டத்தில் நின்றுகொண்டிருந்தார். மண்வெட்டியால் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்தார். அவரிடம், "அல்லாஹ்வின் அடியாரே! உங்களின் பெயரென்ன?" என்று கேட்டார். அதற்கு மேகத்தில் கேட்ட அதே பெயரையே அவர் கூறினார். அவர் கேட்டார்: "அல்லாஹ்வின் அடியாரே! எதற்காக எனது பெயரைக் கேட்கிறீர்கள்?" அதற்கு அந்த மனிதர், "இந்தத் தண்ணீர் எந்த மேகத்திலிருந்து வந்ததோ அந்த மேகத்தில் உங்கள் பெயர் கூறி, "இன்னாருடைய தோட்டத்தில் மழை பொழியச் செய்வாயாக!" என்ற ஒரு சப்தத்தைக் கேட்டேன். (அதனால்தான் கேட்கிறேன்)" என்று பதில் கூறினார்.

மேலும், "இதில் நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்றும் கேட்டார். அதற்கவர், "நீங்கள் இவ்வாறு கேட்கும்போது நான் கூறித்தானே ஆகவேண்டும். இத்தோட்டத்தில் என்ன விளைகிறது என்று பார்ப்பேன். அதில் மூன்றில் ஒரு பகுதியை தர்மம் செய்வேன். மூன்றில் ஒரு பகுதியை

நானும் என் குடும்பத்தாரும் உண்போம். மூன்றில் ஒரு பகுதியை திரும்பவும் இத்தோட்டத்தைப் பராமரிக்க செலவு செய்வேன்" என்று பதில் கூறினார். மற்றொரு அறிவிப்பில் "மூன்றில் ஒரு பகுதியை ஏழைகளுக்கும் யாசிப்போருக்கும் வழிப்போக்கருக்கும் கொடுப்பேன்" என்று அவர் கூறியதாக உள்ளது. அறிவிப்பவர்: அபூஹு ரைரா (ரலி), நூல்: முஸ்லிம் 2984

(இறைவழியில்) செலவு செய்வது அழகிய பண்பாகும். வறுமை அல்லது ஏழ்மைக்காகச் செலவு செய்யும்போது இதன் அழகு பன்மடங்காகும் என்பது மட்டுமல்ல இதில் கொடைத்தன்மை, பொது நலம் பேணல் என்கிற இரண்டு பண்புகளும் சேர்ந்து கொள்ளும். எந்தச் செயல் குறித்து அல்லாஹ் வியப்படைந்தானோ அதனை நான் உங்க ளுக்கு எடுத்துச் சொல்ல அனுமதியுங்களேன்.

ஒரு மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, "நான் பசியோடு இருக்கிறேன்" என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள் தமது மனைவியரில் ஒருவரிடம் (ஏதே னும் இருக்கிறதா என்று பார்த்து வர) தூது அனுப்பி னார்கள். அப்போது அந்த மனைவி "உங்களை சத்தி யத்துடன் அனுப்பி வைத்த இறைவன் மீது சத்தியமாக தண்ணீரைத் தவிர வேறு எதுவும் என்னிடம் இல்லை" என்று கூறினார். பிறகு தமது மற்றொரு மனைவியிடம் தூது அனுப்பினார்கள். அவரும் அதுபோன்றே கூறிவிட் டார். இவ்வாறாக அவர்களது அனைத்து மனைவியரும்

“உங்களை சத்தியத்துடன் அனுப்பி வைத்த இறைவன் மீது சத்தியமாக என்னிடம் தண்ணீரைத் தவிர வேறு எதுவுமில்லை” என்று கூறிவிட்டனர்.

அதன் பிறகு நபி(ஸல்) அவர்கள், “இன்றிரவு இந்த மனிதருக்கு யார் விருந்து அளிக்கிறாரோ அவருக்கு அல்லாஹ் அருள் புரிவான்” என்று கூறினார்கள். உடனே ஒரு அன்சாரித் தோழர், “அல்லாஹ்வின் தூதரே! நான் செய்கிறேன்” என்று கூறினார். பிறகு அந்த மனிதரை தனது இல்லத்திற்கு அழைத்துச் சென்றார்.தனது மனைவி யிடம் “உன்னிடம் ஏதும் இருக்கிறதா?” என்று கேட்டார். அதற்கு அவர், “என் குழந்தைகளுக்கான (சிறிது) உண வைத் தவிர வேறு எதுவும் இல்லை” என்றார். அதற்கு அந்த அன்ஸாரித் தோழர், “அவர்களுக்கு ஏதேனுமொன் றைக் கூறி உணவை விட்டும் அவர்களை மறக்கடித்து விடு. நம் விருந்தாளி உள்ளே வந்ததும் விளக்கை சரி செய்வது போலச் சென்று அதனை அணைத்துவிடு; நாமும் (அவருடன்) சாப்பிடுவதுபோல் (பாவனை) காட்டு!” என்று கூறினார்.

இவ்வாறாக அந்தக் குடும்பத்தினர் எதுவும் உண் ணாமல் இருந்தனர். விருந்தாளி மட்டுமே உணவு உட் கொண்டார். மறுநாள் காலையில் அந்த அன்ஸாரித் தோழர் நபி(ஸல்) அவர்களிடம் சென்றார். அப்போது அவர்கள், “நேற்றிரவு உங்கள் விருந்தாளியிடம் நீங்கள்

நடந்து கொண்டதைப் பார்த்து அல்லாஹ் வியப்படைந் தான்" என்று கூறினார்கள். (புகாரி 3798, முஸ்லிம் 2054) இந்த வாசகம் முஸ்லிமுக்குரியதாகும்.

அந்த நபித்தோழர்கள் நபிகளாரின் நற்குணங்களில் வளர்ந்த சமுதாயம்! அதன் தெளிந்த ஊற்றைப் பருகிய சமுதாயம்! சுயநலம் என்பதையே அறியாத சமுதாயம்! இதோ அவர்களில் ஒரு பிரிவினரைப் பற்றி நபி(ஸல்) அவர்கள் சிறந்த தன்மைகளைக் கொண்டும், உயர்ந்த பண்புகளைக் கொண்டும் சிலாகித்துக் கூறியுள்ளார்கள். இன்று நம்முடைய சமுதாயம் அவர்களின் வழியில் சென்றால் இந்தச் சமுதாயத்தில் ஒரு ஏழைகூட இருக்க மாட்டார். அவர்கள்தான் அஷ்அரி குலத்தினர்! அவர்க ளைப் பற்றித்தான் நபி(ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்.

عَنْ أَبِي مُوسَى قَالَ قَالَ النَّبِيُّ ﷺ إِنَّ الْأَشْعَرِيِّينَ إِذَا أَرْمَلُوا فِي الْغَزْوِ أَوْ قَلَّ طَعَامُ عِيَالِهِمْ بِالْمَدِينَةِ جَمَعُوا مَا كَانَ عِنْدَهُمْ فِي ثَوْبٍ وَاحِدٍ ثُمَّ اقْتَسَمُوهُ بَيْنَهُمْ فِي إِنَاءٍ وَاحِدٍ بِالسَّوِيَّةِ فَهُمْ مِنِّي وَأَنَا مِنْهُمْ (خ/ ٢٤٨٦، م/ ٢٥٠٠)

"அஷ்அரி குலத்தினர் போரின்போது கையிருப்பிலுள்ள பயண உணவு (இருப்பு) குறைந்து விட்டால் அல்லது மதீனாவில் தங்கள் மனைவி மக்களின் உணவு (இருப்பு) குறைந்துவிட்டால் தங்களிடம் (எஞ்சி) இருப்பதை ஒரு துணியில் சேகரித்து, பிறகு அதை தங்களிடையே ஒரு

பாத்திரத்தில் சமமாகப் பங்கிட்டுக் கொள்வார்கள். அவர்கள் என்னைச் சேர்ந்தவர்கள். நான் அவர்களைச் சேர்ந்தவன்." (புகாரி 2486, முஸ்லிம் 2500)

எச்சரிக்கை! சகோதரர்களே! நிராசை உங்களை ஆட்கொண்டு விட வேண்டாம்! நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் வழியிலும் நம் முன்னோர்களான சான் றோர்களின் வழியிலும் நடைபோடக்கூடிய தாராள மனம் உடையவர்கள் நம் சமுதாயத்தில் இன்னமும் இருந்து கொண்டிருக்கின்றனர். உலகின் ஒவ்வொரு பகுதியிலும் உள்ள வஞ்சிக்கப்பட்ட நம் சகோதரர்களுக்காக தான தர்மங்களையும் நற்காரியங்களையும் செய்வதற்கு நாம் என்றைக்குமே மறந்துவிடக்கூடாது.

ஈகையின் சில வடிவங்கள் இவ்வாறு இருக்கின்றன. அதாவது அதன் தாராளத்தால் உள்ளங்கள் மகிழ்ச்சி யடைகின்றன. அதன் கொடையால் இதயங்கள் பூரிப் படைகின்றன. அதனைக் காண்பவர் இது இந்த பூமிக்குப் பாதுகாப்பாகும் என்பதையும் இந்த பூமியின் ஸ்திரத் தன்மை மற்றும் பாதுகாப்பின் இரகசியமாகும் என்பதை யும் அறிந்து கொள்வார்.

அலீ தன்தாவீ (ரஹ்) எனும் அறிஞர் தமது வாழ்க்கைக் குறிப்பில் குறிப்பிட்டிருந்த இரண்டு நிகழ்ச்சிகள் என்னை வியப்பில் ஆழ்த்தின. அதன் முன்னுரையில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

ஷேக் ஸலீம் மிஸ்வதீ (ரஹ்) என்றொரு அறிஞர் ஏழ்மை நிலையில் இருந்தும் யாசிப்பவருக்கு இல்லை என்று எப்போதும் சொன்னது கிடையாது. அவர் நீண்ட காலமாக ஒரு குளிராடையை அணிந்து வந்தார். ஒரு முறை குளிரால் நடுங்கிக் கொண்டிருந்த ஒருவரை சந்தித்தார். உடனே அந்த ஆடையைக் கழற்றி அவரிடம் கொடுத்து விட்டு லுங்கியை மட்டும் அணிந்து கொண்டு வீட்டிற்குத் திரும்பினார்.

இதே போன்று அவர் பலகாலமாக தமது குடும்பத் தாரின் முன்னிலையிலே சாப்பாட்டு விரிப்பிலிருந்து உணவை எடுத்து யாசிப்பவருக்குக் கொடுத்து வந்தார். ரமளான் மாதத்தில் ஒரு நாள்! வெடிச்சப்தத்தை (நோன்பு துறப்பதற்கான அறிவிப்பை) எதிர்பார்த்து மேசை மீது உணவுகள் வைக்கப்பட்டிருந்தன. அப்போது யாசிப்பவர் ஒருவர் வந்து தானும் தனது குடும்பத்தினரும் உண வின்றி இருப்பதாக சத்தியம் செய்து கூறினார். உடனே ஷேக் ஸலீம் அவர்கள் தமது மனைவி கவனமற்றி ருக்கும் நேரம் பார்த்து யாசிப்பவருக்காகக் கதவைத் திறந்து, இருக்கின்ற உணவு அனைத்தையும் அவருக்கு கொடுத்து விட்டார். இதைக் கண்ட அவருடைய மனைவி கூச்சலிட்டாள்; “நாசமாப் போக!” என்று கத்தினாள். “இனி நான் உம்முடன் இருக்க மாட்டேன்” என்று சத்தியம் செய்தாள். அவரோ மௌனமாக இருந்தார்.

பிறகு அரை மணி நேரம் கூட ஆகவில்லை கதவு தட்டப்பட்டது. பல வகை உணவுகள், இனிப்பு வகைகள், பழங்கள் நிறைந்த தட்டுக்களை ஏந்தியவாறு ஒரு மனிதர் வந்தார். “என்ன விஷயம்?” என்று கேட்டார்கள். அதற்கு அவர், “இந்நகரத்தின் அமீர்- ஆளுநர் சில முக்கியப் பிரமுகர்களை விருந்துக்கு அழைத்திருந்தார். ஏதோ காரணத்தால் அவர்கள் வரவில்லை. அதனால் அவர் கோபப்பட்டு இந்த உணவைச் சாப்பிடுவதில்லை என சத்தியம் செய்துவிட்டார். மேலும் உணவு முழுவ தையும் ஷேக் ஸலீம் மிஸ்வதீ (ரஹ்) அவர்களின் வீட்டிற்கு எடுத்துச் செல்லும்படி உத்தரவிட்டார்” என்று கூறினார்.

மற்றொரு நிகழ்ச்சி: இது ஒரு பெண்ணின் கதை! அவளுடைய மகன் பயணம் சென்றிருந்தான். ஒரு நாள் அப்பெண்மணி சாப்பிடுவதற்காக அமர்ந்தாள். அவள் முன் சிறிதளவு குழம்பும் ஒரு ரொட்டித் துண்டு மட்டுமே இருந்தது. அப்போது யாசிப்பவர் ஒருவர் வந்தார். உடனே உணவைத் தனது வாயில் வைக்காமல் விலக்கிக் கொண்டு அதனை யாசிப்பவருக்குக் கொடுத்து விட்டு பட்டினியுடன் இரவைக் கழித்தாள். அவளுடைய மகன் பயணத்திலிருந்து திரும்பி வந்தபோது பயணத்தில் தான் கண்ட காட்சியை தன்னுடைய தாயாரிடம் கூறலானான்.

அதாவது “எனக்கு நடந்த ஆச்சரியமான விஷயம் என்னவெனில், வழியில் ஒரு சிங்கம் என்னை எதிர்

கொண்டது. தன்னந்தனியாக இருந்த நான் அதை விட்டும் வெருண்டோடினேன். அது என் மீது பாய்ந்தது. நிச்சயம் நான் அதன் வாயினுள் சிக்கிவிடுவேன் என்றே உணர்ந் தேன். அப்போது என் முன் வெண்ணிற ஆடை அணிந்த ஒரு மனிதர் தோன்றி என்னை அந்தச் சிங்கத்திடமிருந்து விடுவித்தார். மேலும் அவர் “ஒரு கவளத்திற்குப் பகர மாக ஒரு கவளம்!” என்றும் கூறினார். அதன் கருத்து என்னவென எனக்குப் புரியவில்லை” என்று கூறினான். உடனே அவனுடைய தாய் அவனிடம் “அந்தச் சம்பவம் நடந்தது எப்போது?” என்று கேட்டார். அது அவனது தாய் ஒரு ஏழைக்குத் தர்மம் செய்த அதே நாளில்தான் நடந்தது. அவள் ஒரு கவள உணவை அல்லாஹ்வின் பாதையில் தர்மம் செய்வதற்காக தனது வாயில் போ டாமல் விலக்கிக் கொண்டாள். அதனால் அவளுடைய மகன் சிங்கத்தின் வாயில் செல்லாமல் விலக்கப்பட்டான்.

கருமித்தனத்தின் துர்ப்பாக்கியத்தை என்னவென்பது! கருமித்தனம் செய்பவருக்கு இழிவும் கேவலமும்தான் கிடைக்கப் பெறும். அழிவையே அவர் அறுவடை செய் வார். கருமித்தனம் தனிமனிதனுக்கும் சமுதாயத்துக்கும் அழிவைத் தவிர வேறு எதையும் அனந்தரமாகத்தராது. உண்மையானவரும் உண்மைப்படுத்தப்பட்டவருமான நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்:

((وَاتَّقُوا الشُّحَّ فَإِنَّ الشُّحَّ أَهْلَكَ مَنْ كَانَ قَبْلَكُمْ حَمَلَهُمْ

عَلَى أَنْ سَفَكُوا دِمَاءَهُمْ وَاسْتَحَلُّوا مَحَارِمَهُمْ)) (م/ ٢٥٧٨)

“கருமித்தனத்தை விட்டும் தவிர்ந்து கொள்ளுங்கள். ஏனெனில் கருமித்தனம் உங்களுக்கு முன் சென்றவர் களை அழித்திருக்கிறது. கொலை செய்யவும் தடை செய்யப்பட்ட காரியங்களை ஆகுமெனக் கருதவும் அது அவர்களைத் தூண்டியிருக்கிறது.” (முஸ்லிம் 2578)

## பூங்கா 4.
## இரக்கம் காட்டுதல்

இந்தப் பூங்காவில் ரோஜா, மல்லிகையின் மணம் பரவு கிறது. இரக்க குணம் கொண்டவர்களின் வருகைக்காக இதன் கொடிகள் மகிழ்ச்சியால் அசைந்தாடுகின்றன. அந்த உள்ளங்கள் கருணை மிக்க (இறை) வனின் முன்னிலையில் பணிவதற்குப் பக்குவப்பட்டுள்ளன. அதனால் அவர்கள் தம் இறைவனின் கருணையையும் பரிவையும் நாடி, அவனது படைப்பினங்களிடம் மென்மை யாகவும் அவனுடைய அடியார்களிடம் பரிவுடனும் நடந்து கொள்வார்கள்.

இரக்கம் உடையவர்கள்! நாம் இப்படித் திகழ்ந்திட வேண்டுமென்றே அல்லாஹ் நம்மிடம் எதிர்பார்க்கிறான். எனவே நாம் இரக்கம் எனும் சுனையிலிருந்தே வழித் துணைச் சாதனத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். கருணையின் ஊற்றிலிருந்தே பருகிக் கொள்ள வேண்டும்.

﴿ مُحَمَّدٌ رَسُولُ اللهِ وَالَّذِينَ مَعَهُ أَشِدَّاءُ عَلَى الكُفَّارِ رُحَمَاءُ بَيْنَهُمْ تَرَاهُمْ رُكَّعًا سُجَّدًا يَبْتَغُونَ فَضْلًا مِنَ اللهِ وَرِضْوَانًا ﴾ [الفتح:٢٩]

“முஹம்மது அல்லாஹ்வின் தூதராவார். அவருடன் இருப்பவர்கள் நிராகரிப்பாளர்கள் மீது கடுமையானவர் களாகவும், தமக்கிடையே இரக்க மிக்கவர்களாகவும் உள்ளனர். ருகூவு, ஸுஜூது செய்பவர்களாக அவர்களை காண்பீர். அவர்கள் அல்லாஹ்விடமிருந்து அருளையும் உவப்பையும் தேடுவார்கள்.” (அல்குர்ஆன்: 48:29)

இதோ காருண்ய நபியிடம் ஒரு குழந்தை கொடுக் கப்படுகிறது. அதன் உயிர் அதன் நெஞ்சில் ஊசலாடு கிறது! அதன் சிறிய உடலை விட்டும் அவ்வுயிர் பிரியத் துடிக்கின்றது! நபிகளாரின் கண்களிலிருந்தோ பாக்கியம் நிறைந்த கண்ணீர் வடிகின்றது. அவர்களிடம் ஸஅத்(ரலி) கேட்டார்கள்: “அல்லாஹ்வின் தூதரே! என்ன இது?” அதற்கு நபி(ஸல்) அவர்கள், “அல்லாஹ் தன் அடியார் களின் உள்ளங்களில் ஏற்படுத்திய இரக்க உணர்வாகும் இது! தனது அடியார்களிடம் இரக்கம் காட்டுபவருக்கே அல்லாஹ்வும் இரக்கம் காட்டுவான்” என்று கூறினார்கள். (பார்க்க: புகாரி 1284, முஸ்லிம் 923)

சகோதரர்களே! நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். அதாவது இரக்கம் காட்டுதல் என்பது சொர்க்கம் செல்வ தற்குரிய ஒரு வழியாகும். என்னே அருமையான வழி அது! ஏன் அவ்வாறு இருக்க முடியாது?! அல்லாஹ் ஒரு

மனிதரை அவரது உள்ளத்தில் நிறைந்திருந்த இரக்க உணர்வின் காரணமாக சொர்க்கத்தில் நுழையச் செய்தான். ஏன்? எதனால்? உண்மையாளரும் உண்மைப்படுத்தப்பட்டவருமான நபி(ஸல்)அவர்களே அந்த நிகழ்ச்சியை நமக்குச் சுருக்கமான மற்றும் நுட்பமான வாசகங்கள் மூலம் சொல்லட்டும்; கேட்போம்.

(بَيْنَا رَجُلٌ يَمْشِي فَاشْتَدَّ عَلَيْهِ الْعَطَشُ فَنَزَلَ بِئْرًا فَشَرِبَ مِنْهَا ثُمَّ خَرَجَ فَإِذَا هُوَ بِكَلْبٍ يَلْهَثُ يَأْكُلُ الثَّرَى مِنْ الْعَطَشِ فَقَالَ لَقَدْ بَلَغَ هَذَا مِثْلُ الَّذِي بَلَغَ بِي فَمَلَأَ خُفَّهُ ثُمَّ أَمْسَكَهُ بِفِيهِ ثُمَّ رَقِيَ فَسَقَى الْكَلْبَ فَشَكَرَ اللهُ لَهُ فَغَفَرَ لَهُ قَالُوا يَا رَسُولَ اللهِ وَإِنَّ لَنَا فِي الْبَهَائِمِ أَجْرًا قَالَ فِي كُلِّ كَبِدٍ رَطْبَةٍ أَجْرٌ) (خ/ ٢٣٦٣، م/ ٢٢٤٤)

நபி(ஸல்)அவர்கள் கூறுகிறார்கள்: ஒரு மனிதர் நடந்து சென்று கொண்டிருக்கும்போது அவருக்குக் கடுமையான தாகம் ஏற்பட்டது. உடனே அவர் ஒரு கிணற்றில் இறங்கி அதன் தண்ணீரை அருந்தினார். பிறகு வெளியே வந்த போது நாக்கைத் தொங்கவிட்டுக் கொண்டு ஒரு நாய் நின்றது. தாகத்தால் ஈர மண்ணை நக்கிக் கொண்டிருந்தது. அந்த மனிதர் (தனக்குள்) இவ்வாறு கூறிக் கொண்டார்: “எனக்கு ஏற்பட்ட நிலை இதற்கும் ஏற்பட்டிருக்கிறது!” பிறகு கிணற்றில் இறங்கி (தோலினாலான) தனது காலுறையில் தண்ணீரை நிரப்பி தனது வாயால் கவ்விக் கொண்டு மேலே ஏறினார். அந்த நாய்க்கு தண்ணீர் புகட்டினார். இவரது நன்றியுணர்வை அல்லாஹ்

ஏற்றுக் கொண்டு அவரை மன்னித்தான். அல்லாஹ்வின் தூதரே! “வாயில்லா ஜீவன்கள் விஷயத்திலும் நமக்கு நற்கூலி உண்டா?” என்று தோழர்கள் கேட்டனர். அதற்கு நபி(ஸல்)அவர்கள், “ஈரமான ஈரலுடைய ஒவ்வொரு ஜீவன் விஷயத்திலும் நற்கூலி உண்டு” என்று கூறி னார்கள். (புகாரி 2363, முஸ்லிம் 2244)

முரட்டுத்தனமும் கடின சித்தமும் உடையவனின் துர்ப் பாக்கியத்தை என்னவென்பது! இத்தகைய ஒருவனிடம் மனிதனுக்கே இரக்கம் கிடைக்காது எனும்போது- முக மலர்ச்சியின் மூலமாகக்கூட இரக்கம் காட்ட மாட்டான் எனும் போது வாயில்லா ஜீவன்களுக்கு இவனிடம் எப்படி இரக்கம் கிட்டும்?! இவனது நிலை மிக மோசமான நிலை யாகும்! இத்தகைய மனிதனுக்கு துர்ப்பாக்கியமே உண்டு என்று நானோ அல்லது நீங்களோ முடிவு செய்யவில்லை. மாறாக காருண்ய நபி(ஸல்)அவர்களே இவ்வாறு முடிவு செய்துள்ளார்கள். ((لَا تُنْزَعُ الرَّحْمَةُ إِلَّا مِنْ شَقِيٍّ)) (ت/ ١٩٢٣)

“துர்ப்பாக்கியம் உடைவனிடமிருந்தே இரக்க குணம் பறிக்கப்படும்” என நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். (திர்மிதி 1923, அஹ்மத் 9566) இது ஹஸன் எனும் தரத்தில் அமைந்தது என இமாம் திர்மிதி கூறியுள்ளார்கள்.

முஸ்லிம்களே! நரகத்திற்குப் பிறகு வேறு ஒரு துர்ப் பாக்கியம் உண்டா? இதோ நரகத்திற்குத் தகுதியாகி விட்ட ஒரு பெண்! அந்த நரகம்தான் மோசமான இருப்

பிடம்! இருள் படிந்த அவளது இதயத்தில் இறையருளால் இரக்க குணம் திரும்பிய போது அவளது ஒதுங்குமிடம் குறித்து நம் நேசத்திற்குரிய நபி(ஸல்)அவர்கள் நமக்கு கூறியுள்ளார்கள்.

((عُذِّبَتْ امْرَأَةٌ فِي هِرَّةٍ سَجَنَتْهَا حَتَّى مَاتَتْ فَدَخَلَتْ فِيهَا النَّارَ لَا هِيَ أَطْعَمَتْهَا وَلَا سَقَتْهَا إِذْ حَبَسَتْهَا وَلَا هِيَ تَرَكَتْهَا تَأْكُلُ مِنْ خَشَاشِ الْأَرْضِ))(خ/ ٣٤٨٢)

அதாவது “ஒரு பூனையின் காரணமாக ஒரு பெண் (நரகில்) வேதனை செய்யப்பட்டாள். காரணம் அது சாகும் வரை அதை அவள் சிறை வைத்திருந்தாள். அதனால் அவள் நரகத்திற்குச் சென்றாள். அதனை அவள் கட்டி வைத்திருந்தபோது அதற்கு அவள் உணவ ளிக்கவுமில்லை, தண்ணீர் கொடுக்கவுமில்லை, மேலும் பூமியின் புழு, பூச்சிகளையும் ஜந்துக்களையும் கூட திண்பதற்கு அதனை அவள் விடவுமில்லை.” (புகாரி 3482)

நீர் ஒரு நோயாளியை சந்தித்து அவரை நலம் விசா ரிக்கும்போது உம்மை கருணை எப்படி ஆட்கொள்கிறது? என்கிற அனுபவம் உமக்கு உண்டா சகோதரா? துன்பம் அந்த நோயாளியின் கண்களில் தூக்கத்தைக் கலைத் தது! வேதனை அவரை இரவெல்லாம் விழித்திருக்கச் செய்தது!

((مَا مِنْ مُسْلِمٍ يَعُودُ مُسْلِمًا غُدْوَةً إِلَّا صَلَّى عَلَيْهِ سَبْعُونَ أَلْفَ مَلَكٍ حَتَّى يُمْسِيَ وَإِنْ عَادَهُ عَشِيَّةً إِلَّا صَلَّى عَلَيْهِ سَبْعُونَ أَلْفَ مَلَكٍ حَتَّى يُصْبِحَ وَكَانَ لَهُ

خَرِيفٌ فِي الْجَنَّةِ)) (ت/ ٩٦٩) وقال حديث حسن

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிம் நோயாளியை காலையில் நலம் விசாரித்தால் மாலை வரை எழுபது வானவர்கள் அவருக்காக கருணை வேண்டிப் பிரார்த்திக்கின்றனர். மாலையில் நலம் விசாரித்தால் காலை வரை அவருக்காக எழுபது வானவர்கள் கருணை வேண்டிப் பிரார்த்திக்கின்றனர். சொர்க்கத்தில் அவருக்காக கனிகள் உள்ளன.” (திர்மிதி 969) இமாம் திர்மிதி அவர்கள் இதனை ஹஸன் எனும் தரத்தில் அமைந்த ஹதீஸ் என்று கூறியுள்ளார்கள்.

அருமைச் சகோதரரே! தந்தையின் அன்பை இழந்து, அந்த இழப்பின் துயர அமுதை அருந்தி வளரும் அநாதைக்கு பராமரிப்புக் கரம் நீட்டுங்கள். இதனால் உங்களது இந்த நற்செயலுக்காக நபி(ஸல்)அவர்களின் வாக்கிலுள்ள பாக்கியம் உங்களுக்குக் கிடைக்கட்டும்.

(وَأَنَا وَكَافِلُ الْيَتِيمِ فِي الْجَنَّةِ هَكَذَا وَأَشَارَ بِالسَّبَّابَةِ وَالْوُسْطَى وَفَرَّجَ بَيْنَهُمَا شَيْئًا)

“நானும் அநாதையைப் பராமரிப்பவரும் சொர்க்கத்தில் இவ்வாறு இருப்போம்” என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது தமது ஆட்காட்டி விரலையும் நடுவிரலையும் சிறிது இடைவெளியுடன் நெருக்கமாக வைத்துச் சுட்டிக் காட்டினார்கள். (புகாரி 5304)

விதவைக்கு அன்பு செலுத்தும் நெஞ்சங்களாக இருங்கள்! மரணம் அவளையும் அவளது பாசத்திற்குரிய

கணவரையும் பிரித்துவிட்டது. அந்தப் பிரிவு அவளது இதயத்தை நொருக்கி விட்டது. பிறரைச் சார்ந்து வாழும் வறிய நிலை அவளது தோள் மீது சுமையாகி விட்டது.

((السَّاعِي عَلَى الْأَرْمَلَةِ وَالْمِسْكِينِ كَالْمُجَاهِدِ فِي سَبِيلِ الله
أَوْ الْقَائِمِ اللَّيْلَ الصَّائِمِ النَّهَارَ)) (خ/ ٥٣٥٣)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: "ஏழைகள் மற்றும் விதவைகளுக்காகப் பாடுபடுபவர் அல்லாஹ்வின் பாதையில் போர் புரிபவரைப் போலாவார். அல்லது பகலெல்லாம் நோன்பு நோற்று இரவெல்லாம் நின்று வணங்குபவரைப் போலாவார்." (புகாரி 5353)

பாசத்திற்குரியவர்களே! பலவீனமானவனுக்காக இரக்கம் எனும் சிறகைத் தாழ்த்துவீர்களாக. கவலை அவனைப் பலவீனப்படுத்தியுள்ளது. அந்த பலவீனம் அவனை நொடித்து விட்டது.

அல்லாஹ் கூறுகிறான்: அநாதையை அடக்குமுறை செய்யாதீர். யாசிப்பவரை விரட்டாதீர். (93:9,10)

உங்கள் மனைவியருக்கும் உங்கள் பெண்மக்களுக்கும் இரக்கத்தின் கூடாரத்தில் நிழல் கொடுங்கள். அவர்கள் கல்வியிலும் பொருளாதாரத்திலும் என்னதான் உயர்ந்துவிட்டாலும் உங்களது அன்பிலும் தயவிலும் தான் அவர்கள் நிழல் பெற வேண்டும். நன்மைக்கு முந்துவோரே! நீங்கள் காட்டும் இரக்கத்தின் பிரதிபலன்

பாக்கியம் நிறைந்தது! அதன் பலன் அழகானது! என்பதை நினைவில் வையுங்கள்!

عَنْ عَائِشَةَ أَنَّهَا قَالَتْ جَاءَتْنِي مِسْكِينَةٌ تَحْمِلُ ابْنَتَيْنِ لَهَا فَأَطْعَمْتُهَا ثَلَاثَ تَمَرَاتٍ فَأَعْطَتْ كُلَّ وَاحِدَةٍ مِنْهُمَا تَمْرَةً وَرَفَعَتْ إِلَى فِيهَا تَمْرَةً لِتَأْكُلَهَا فَاسْتَطْعَمَتْهَا ابْنَتَاهَا فَشَقَّتْ التَّمْرَةَ الَّتِي كَانَتْ تُرِيدُ أَنْ تَأْكُلَهَا بَيْنَهُمَا فَأَعْجَبَنِي شَأْنُهَا فَذَكَرْتُ الَّذِي صَنَعَتْ لِرَسُولِ الله ﷺ فَقَالَ إِنَّ الله قَدْ أَوْجَبَ لَهَا بِهَا الْجَنَّةَ أَوْ أَعْتَقَهَا بِهَا مِنْ النَّارِ (م/ ٢٦٣٠)

ஆயிஷா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஓர் ஏழைப் பெண் தனது இரண்டு பெண் மக்களை சுமந்து கொண்டு என்னிடம் வந்தாள். நான் மூன்று பேரீத்தம்பழங்களை அவளிடம் கொடுத்தேன். அவள் அவ்விருவருக்கும் தலா ஒரு பேரீத்தம் பழத்தைக் கொடுத்துவிட்டு மற்றொன் றைத் தான் உண்பதற்காக வாயில் போடச் சென்றாள். அப்போது அந்த இரண்டு குழந்தைகளும் அந்த பேரீத்தம் பழத்தைக் கேட்டனர். உடனே அவள் உண்ண இருந்த அந்தப் பழத்தை இரண்டாகப் பிளந்து அவர்களுக்குக் கொடுத்தாள். அவளது அந்தச் செயல் என்னை வியப்பில் ஆழ்த்தியது. அவள் செய்ததை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்தேன். அதற்கு அவர்கள், "அதற்குப் பகரமாக அல்லாஹ் அவளுக்கு சொர்க்கத்தை கடமையாக்கி விட்டான் என்றோ "அதற்குப் பகரமாக அல்லாஹ் அவளை நரகத்திலிருந்து விடுதலை செய்து

விட்டான்" என்றோ கூறினார்கள். (முஸ்லிம் 2630)

உறவினர்களுடன் இணைந்து வாழுங்கள்! ஏனெனில் உறவினர்கள் என்பதற்குப் பயன்படுத்தப்படும் அல்அர் ஹாம் எனும் அரபிச் சொல் ரஹ்மத் (இரக்கம்) எனும் சொல்லிருந்து வந்ததுதான். இதன் பலனின் சுவையை மறுமைக்கு முன் இவ்வுலகிலேயே சுவைத்துவிடுவீர்கள்.

((مَنْ سَرَّهُ أَنْ يُبْسَطَ عَلَيْهِ رِزْقُهُ أَوْ يُنْسَأَ فِي أَثَرِهِ فَلْيَصِلْ رَحِمَهُ)) (م/ ٢٥٥٧)

"தனக்கு வாழ்வாதாரம் தாராளமாக வழங்கப்பட வேண்டும் என்றோ அல்லது தனது வாழ்நாள் அதிகரிக் கப்பட வேண்டுமென்றோ விரும்புபவர் தனது உறவின ருடன் இணைந்து வாழட்டும்." என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம் 2557)

இதை மனதிற் கொள்ளுங்கள்! அதாவது உங்களின் பணியாள்- அவனுக்கு ஏற்பட்ட உடனடித் தேவைக்கா கவும், அவனது சந்ததிகளை மெலியச் செய்துவிட்ட அவனது வாழ்க்கைத் துயரத்துக்காகவும்தான் உங்க ளிடம் வந்துள்ளான். எனவே அவனிடம் நீங்கள் கடுமை யாக நடந்து கொள்ளாதீர்கள்; அவனுடைய தவறுகளை மன்னித்துவிடுங்கள். அனஸ் (ரலி) கூறுகிறார்கள்:

((خَدَمْتُ النَّبِيَّ ﷺ عَشْرَ سِنِينَ فَمَا قَالَ لِي أُفٍّ وَلَا لِمَ صَنَعْتَ وَلَا أَلَّا صَنَعْتَ))

"நபி(ஸல்)அவர்களுக்கு நான் பத்து வருடங்கள் பணி விடை செய்துள்ளேன். அவர்கள் என்னைச் "சீ" என்று

கூறியது கிடையாது. (நான் செய்த ஒரு காரியத்தைப் பற்றி) “இதை ஏன் செய்யவில்லை” என்றோ (நான் செய் யாத ஒன்றை) “இதைச் செய்திருக்கக்கூடாதா” என்றோ என்னிடம் கேட்டது கிடையாது.” (புகாரி 6038)

عَنْ عَائِشَةَ قَالَتْ مَا ضَرَبَ رَسُولُ اللهِ ﷺ شَيْئًا قَطُّ بِيَدِهِ وَلَا امْرَأَةً وَلَا خَادِمًا إِلَّا أَنْ يُجَاهِدَ فِي سَبِيلِ اللهِ (م/ ٢٣٢٨)

“நபி (ஸல்) அவர்கள் தமது கையால் யாரையும் எப்போதும் அடித்தது கிடையாது. தம்முடைய எந்த மனைவியையும் அடித்தது கிடையாது. தமது எந்தப் பணியாளரையும் அடித்தது கிடையாது. ஆனால் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரியும்போது மட்டும் தம்முடைய கையால் (எதிரிகளை) அடித்துள் ளார்கள்” என ஆயிஷா(ரலி) அவர்கள் அறிவித்துள் ளார்கள். (முஸ்லிம் 2328)

عَنِ ابْنِ عُمَرَ أَنَّ رَجُلًا أَتَى رَسُولَ اللهِ ﷺ فَقَالَ يَا رَسُولَ اللهِ إِنَّ لِي خَادِمًا يُسِيءُ وَيَظْلِمُ أَفَأَضْرِبُهُ قَالَ تَعْفُو عَنْهُ كُلَّ يَوْمٍ سَبْعِينَ مَرَّةً (حم/ ٥٣٧٧)

ஒரு மனிதர் நபி(ஸல்)அவர்களிடம் வந்து, “அல்லாஹ் வின் தூதரே! எனக்கு ஒரு பணியாள் இருக்கின்றான். அவன் (எனக்கு) கேடு செய்கிறான், அநீதி இழைக்கிறான். நான் அவனை அடிக்கலாமா?” என்று கேட்டார். அதற்க வர்கள், “நீ தினமும் எழுபது தடவை அவனைப் பொறுத் துக்கொள்வீராக” என்று கூறினார்கள். (அஹ்மத் 5377)

என்னே ஆச்சரியம்! எப்படி நாம் மழையை எதிர் பார்க்க முடியும்? நாமோ நம்மிடமுள்ள பலவீனர்களின் உரிமையில் பெருமளவு தவறிழைத்திருக்கிறோம். "நீங்கள் உதவி செய்யப்படுவதும் உணவளிக்கப்படு வதும் உங்களிடம் உள்ள பலவீனர்களின் காரணமாகத் தான்" (புகாரி 2896) என்ற நபி(ஸல்)அவர்களின் பொன் மொழியை மறந்து விட்டிருக்கிறோம்.

பலவீனர்களுக்கு உதவி செய்வது நபி(ஸல்)அவர்கள் காட்டிய வழியாகும். அதைப் பின்பற்றுவதில் நற்கூலி உண்டு. அதில் தொடர்ந்து ஈடுபடுவதில் கௌரவமும் கண்ணியமும் உண்டு.

عَنْ جَابِرِ بْنِ عَبْدِ الله قَالَ كَانَ رَسُولُ الله ﷺ يَتَخَلَّفُ فِي المَسِيرِ

فَيُزْجِي الضَّعِيفَ وَيُرْدِفُ وَيَدْعُو لَهُمْ (د/ ٢٦٣٩) وصححه الألباني

"நபி(ஸல்)அவர்கள் பயணத்தின்போது (கூட்டத்தில்) பின்தங்கி வருவார்கள். முந்திச் செல்லுமாறு பலவீனர் களைத் தூண்டுவார்கள். சிலபோது பலவீனரை வாக னத்தில் தமக்குப் பின்னால் வைத்துக் கொள்வார்கள். அவர்களுக்காகப் பிரார்த்திப்பார்கள்." ஜாபிர்(ரலி) அறிவிக்கின்ற இந்த நபிமொழி அபூதாவூதில் (2639) பதிவாகியுள்ளது. இதன் அறிவிப்புத் தொடர் ஹஸன் எனும் தரத்திலுள்ளதாகும். ஆனால் அல்பானி இதனை ஸஹீஹான ஹதீஸ் என்று கூறியுள்ளார்கள்.

இந்தச் சமுதாயத்தில் இறைவழியில் பாடுபடுபவர்கள் இன்னமும் இருந்து கொண்டுதான் இருக்கின்றார்கள். அவர்கள் ஏழைகளுக்காகவும் தேவையுடையோருக் காகவும் உழைக்கிறார்கள். அவர்களிலுள்ள பலவீனர் களுக்கு இரக்கம் காட்டுகிறார்கள், அவர்களிடம் ஆடை யில்லாதோருக்கு ஆடை வழங்குகிறார்கள், அவர்க ளிலுள்ள அநாதைகளைப் பராமரிக்கப் பொறுப்பேற்றுக் கொள்கிறார்கள். அவர்களிலுள்ள விதவைகளுக்காகவும் பாடுபடுகிறார்கள்.

மக்களிடம் பிரபலமான ஒரு கதை உண்டு. ஆனால் அதைக் கூறுவதில் ஒரு ஆறுதலும் படிப்பினையும் இருப் பதாகக் கருதுகிறேன். ஒரு மனிதர் கனவில் நபி(ஸல்) அவர்களைப் பார்க்கிறார். "இன்ன இடத்தில் இன்னா ருடைய மகன் இன்னாரிடம் சென்று சொர்க்கம் குறித்து அவருக்கு நன்மாராயம் கூறு" என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். உடனே அந்த மனிதர் விழித்துவிட்டார். தனது கனவில் நபி(ஸல்) அவர்கள் பெயர் குறிப்பிட்ட அந்த மனிதர் யார்? என்று நினைவுபடுத்திப் பார்க்க முயன்றார். அந்தப் பெயரில் அவருக்குத் தெரிந்த யாரும் அவரது நினைவுக்கு வரவில்லை. எனவே கனவுக்கு விளக்கம் சொல்லக்கூடிய ஒருவரிடம் சென்றார். அவர் "நீர் கண்ட கனவைக் கூறும்" என்று அந்த மனிதரிடம் கேட்டார். அந்த மனிதர், தான் கண்ட கனவைக் கூறலா னார். அதன் விவரங்களைக் குறித்து கேட்டுக் கொண்

டேயிருந்த அவர், இறுதியில் அந்த மனிதர் வசிக்கின்ற ஊரை அறிந்து கொண்டார்.

பிறகு இவரிடமிருந்து அந்த நபரை அறிந்து கொண்ட அந்த (கனவு) மனிதர் அந்த ஊருக்குச் சென்று அந்த நபரைப் பற்றி விசாரித்தார். அவரைப் பற்றி அவருக்குத் தெரிவிக்கப்பட்டது. பிறகு அந்த நபரை அவர் சந்தித்தார். அவர் அவரிடம், “என்னிடம் உங்களுக்கு ஓர் நற்செய்தி உண்டு! ஆனால் நீங்கள் செய்த நற்செயல்கள் என்ன என்பதை நீங்கள் எனக்குக் தெரிவிக்காத வரை நான் அந்த நற்செய்தியை உங்களுக்குக் கூறப்போவதில்லை” என்று கூறினார். அதற்கு அந்த நபர், “மற்ற முஸ்லிம் களிடம் இருக்கின்ற நற்செயலை விடவும் கூடுதலாக என்னிடம் எதுவுமில்லை” என்றார். உடனே அந்த மனிதர், “அப்படியானால் நான் உங்களுக்கு அந்த நற்செய்தி யைக் கூறமாட்டேன்” என்றார். மேலும் அவர் செய்த நன்மையை அறிந்து கொள்ளும் நோக்கில் அந்த நபரை அவரது நற்செயலைக் கூறுமாறு வற்புறுத்தினார்.

பிறகு அந்த நபர் கூறினார்: “மனிதா! நான் வேலை செய்து என் குடும்பத்தாருக்கு செலவு செய்வேன். என் அண்டை வீட்டுக்காரர் மரணித்த போது அவருக்கு மனைவியும், மக்களும் இருந்தார்கள். நான் எனது மாதச் சம்பளத்தை என் வீட்டிற்கும் எனது அண்டை வீட்டிற்கும் பங்கு வைத்துக் கொடுத்து வந்தேன்” என்று! உடனே

கனவு கண்ட அந்த மனிதர், “இந்த நன்மைதான் உங் களை இந்த அந்தஸ்துக்கு உயர்த்தியுள்ளது. இதோ அறிந்து கொள்ளுங்கள்! நான் நபி(ஸல்) அவர்களைக் கனவில் பார்த்தேன்! அவர்கள் உங்களுக்கு சொர்க்கம் குறித்து நற்செய்தி கூறினார்கள்” என்றார்.

## பூங்கா 5
## பெற்றோருக்கு உபகாரம் செய்தல்

நற்செயல்களில் ஒன்றுள்ளது. அதற்கு நிகராக வேறு எந்தச் செயலும் கிடையாது. அது பற்றிய செய்தியை நாம் எங்கிருந்து ஆரம்பிப்பது! எப்படி முடிப்பது!

அதுதான் பெற்றோருக்கு உபகாரம் செய்தல் என்பது! தன்னை மட்டுமே வணங்க வேண்டும் என்று அல்லாஹ் கூறிய பிறகு இதைத்தான் அவன் அறிவுறுத்தியுள்ளான். அவனுடைய நபியும் இதற்கு ஆர்வமூட்டியுள்ளார்கள். அறிஞர்களும், அறிவுரை கூறுவோரும், சொற்பொழிவு நிகழ்த்துவோரும் இதற்கு ஆர்வமூட்டியுள்ளனர்; இதனை விரிவாகவும் விளக்கியுள்ளனர்.

﴿ وَقَضَى رَبُّكَ أَلَّا تَعْبُدُوا إِلَّا إِيَّاهُ وَبِالوَالِدَيْنِ إِحْسَانًا إِمَّا يَبْلُغَنَّ عِنْدَكَ الكِبَرَ أَحَدُهُمَا أَوْ كِلَاهُمَا فَلَا تَقُلْ لَهُمَا أُفٍّ وَلَا تَنْهَرْهُمَا وَقُلْ لَهُمَا قَوْلًا كَرِيمًا، وَاخْفِضْ لَهُمَا جَنَاحَ الذُّلِّ مِنَ الرَّحْمَةِ وَقُلْ رَبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيَانِي صَغِيرًا، رَبُّكُمْ أَعْلَمُ بِمَا فِي نُفُوسِكُمْ إِنْ تَكُونُوا صَالِحِينَ فَإِنَّهُ كَانَ لِلْأَوَّابِينَ غَفُورًا، ﴾ [الإسراء:٢٣-٢٥]

“அவனைத் தவிர வேறு யாரையும் வணங்காதீர்கள்; பெற்றோருக்கு உபகாரம் செய்யுங்கள் என்று உமது இறைவன் கட்டளையிட்டுள்ளான். உம்மிடத்தில் அவர் களில் ஒருவரோ இருவருமோ முதுமையை அடைந்து விட்டால் அவ்விருவரை நோக்கிச் ‘சீ’ எனக் கூறாதீர்! அவ்விருவரையும் விரட்டாதீர்! மரியாதையான சொல் லையே அவ்விருவரிடமும் கூறுவீராக! அன்புடன் பணிவு எனும் சிறகை அவ்விருவருக்காகவும் தாழ்த்துவீராக! சிறுவனாக இருந்தபோது என்னை இருவரும் பராம ரித்தது போல் இறைவா! இவ்விருவருக்கும் அருள் புரிவா யாக! என்று பிரார்த்திப்பீராக! உங்கள் உள்ளங்களில் உள்ளதை உங்கள் இறைவன் நன்கறிபவன். நீங்கள் நல்லோராக இருந்தால் திருந்துவோரை அவன் மன்னிப் பவனாக இருக்கிறான்.” (17:23-25) என்று அல்லாஹ் கூறிய பிறகு நாம் கூறுவதற்கு என்ன இருக்கிறது!

(قَالَ رَسُولُ اللهِ ﷺ رَغِمَ أَنْفُهُ ثُمَّ رَغِمَ أَنْفُهُ ثُمَّ رَغِمَ أَنْفُهُ قِيلَ مَنْ يَا رَسُولَ اللهِ قَالَ مَنْ أَدْرَكَ وَالِدَيْهِ عِنْدَ الْكِبَرِ أَحَدَهُمَا أَوْ كِلَيْهِمَا ثُمَّ لَمْ يَدْخُلِ الْجَنَّةَ) (م/ ٢٥٥١)

“அவனது மூக்கில் மண் ஒட்டட்டும்! அவனது மூக்கில் மண் ஒட்டட்டும்! அவனது மூக்கில் மண் ஒட்டட்டும்!” என்று நபி(ஸல்)அவர்கள் கூறியதும் “அல்லாஹ்வின் தூதரே! யார் அவன்?” என்று கேட்கப்பட்டது. அதற்கு, “யார் தனது பெற்றோரில் ஒருவரையோ இருவரையுமோ முதுமையான நிலையில் பெற்றிருந்து (அவர்களுக்குப்

பணிவிடை செய்வதன் மூலம்) சொர்க்கம் செல்லவில்லையோ அவன்தான்" என்று நபி(ஸல)அவர்கள் கூறிய பிறகு நாம் கூறுவதற்கு என்ன இருக்கிறது!

ஆனால் மன வருத்தத்திற்குரிய விஷயம் என்னவெனில் நாம் இவ்வுண்மையை மறந்துவிடுகிறோம். அதாவது பெற்றோருக்கு உபகாரம் செய்தல் எனும் மரம் விரைந்து பலன் தரக்கூடியதாகும். அதன் கனிகள் பறிக்கத்தக்க வகையில் தாழ்ந்து இருக்கும். பெற்றோருக்கு உபகாரம் செய்பவன் இப்பலனைத் தெளிவாகவும் கண்கூடாகவும் இவ்வுலகிலேயே பார்த்துவிடுகிறான். மறுமையில் அவனுக்காகப் பெரும் நன்மைகள் சேர்த்து வைக்கப்படுகின்றன. இதைத்தான் நாம் மறந்துவிடுகிறோம். பிறகு ஏன் இவ்வுலகின் குழப்பங்கள் இது பற்றிய நமது உறுதிப்பாட்டை அசைத்து வலுவிழக்கச் செய்கின்றன? பெற்றோருக்கு உபகாரம் செய்வதை விட்டும் நம்மை திசை திருப்புகின்றன?

பெற்றோருக்கு உபகாரம் செய்வதென்பது-அல்லாஹ்வின் உதவிக்குப் பிறகு- வாழ்க்கையில் வெற்றி பெறுவதன் இரகசியமாகும். அதுமட்டுமல்ல இதன் மூலம் ஏராளமான துன்பங்களிலிருந்து விடுதலையும் கிடைக்கிறது. உள்ளங்கள் ஆனந்தமடைகின்றன. நெஞ்சங்கள் பூரிப்படைகின்றன. பெற்றோருக்கு உபகாரம் செய்பவன் அதன் பாக்கியத்தை தன் கண்ணெதிரே காண்கின்றான்.

அதனை தனது ஆரோக்கியத்திலும், செல்வத்திலும், இன்னும் தன்னுடைய சந்ததிகளிலும் அபிவிருத்தியாகப் பார்க்கிறான்.

இந்த நபிமொழியை செவிதாழ்த்திக் கேளுங்கள்! இதில் உங்கள் கவனத்தைத் திருப்புங்கள்! இதில் கூறப் பட்டுள்ள பல நல்லமல்களையும் அவற்றின் பலன் எவ்வாறு இருந்தது என்பதையும் சிந்தித்துப்பாருங்கள்!

மூன்று பேர் நடந்து சென்று கொண்டிருந்தபோது திடீ ரென (பலமான) மழை அவர்களைப் பிடித்துக்கொண்டது. எனவே அம்மூவரும் மலைக் குகை ஒன்றில் தஞ்சம் புகுந் தனர். (எதிர்பாராத விதமாக) பெரும் பாறை ஒன்று மலை யிலிருந்து உருண்டு வந்து அந்தக் குகையின் வாயிலை- உள்ளே அவர்கள் இருக்கவே மூடிக் கொண்டது. அவர்கள், “நாம் அல்லாஹ்வுக்காக என தூய்மையான முறையில் செய்த நற்செயல்களை நினைத்துப் பார்த்து அதன் மூலம் அல்லாஹ்விடம் பிரார்த்திப்போம். அவன் இந்தப் பாறையை நம்மை விட்டும் அகற்றிவிடக்கூடும்” என்று தமக்கிடையே பேசிக்கொண்டனர்.

அவர்களில் ஒருவர் இறைவனிடம் இவ்வாறு பிரார்த் தனை செய்தார்: இறைவா! முதிர்ந்த வயதுடைய தாய் தந்தையர் எனக்கு இருந்தனர். எனக்கு ஒரு மனைவியும் சிறு குழந்தைகளும் இந்தனர். அவர்களின் ஜீவனாம்சத் திற்காக நான் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தேன்.

மாலையில் நான் அவர்களிடம் திரும்பி வந்ததும் பாலைக் கறந்து என் குழந்தைகளுக்குக் கொடுப்பதற்கு முன் முதலில் என் பெற்றோர்களுக்குப் புகட்டுவேன். ஒரு நாள் புல்- செடிகொடிகளைத் தேடிச் சென்றது வெகு தூரத்திற்கு என்னைக் கொண்டு சென்றுவிட்டது. அதனால் நான் (தாமதமாக) மாலையில்தான் திரும்பி வந்தேன். அப்போது (என் தாய் தந்தையர்) இருவரும் உறங்கிவிட்டிருக்கக் கண்டேன்.

வழக்கமாக நான் கறந்து வந்ததைப் போலவே அன்றைக்கும் நான் பாலைக் கறந்து எடுத்துக்கொண்டு வந்தேன். அவர்களைத் தூக்கத்திலிருந்து எழுப்பிவிட மனமில்லாமல் அவர்களின் தலைமாட்டில் நின்றுகொண் டிருந்தேன். அவர்களுக்கு முன் என் குழந்தைகளுக்குப் புகட்டவும் எனக்கு விருப்பமில்லை. குழந்தைகள் என் காலுக் கடியில் பசிதாளாமல் துடித்துக்கொண்டிருந்தனர். இதே நிலையில் நானும் என் குழந்தைகளும் வைகறை உதயமாகும் வரை இருந்தோம். நான் உன் திருப்தியை நாடியே இவ்வாறு செய்திருக்கிறேன் என்று நீ அறிந் தால் எங்களுக்கு இந்தப் பாறையை சற்றே நகர்த்திக் கொடுப்பாயாக! அதன் வழியாக நாங்கள் வானத்தைப் பார்த்துக் கொள்வோம். அவ்வாறே அல்லாஹ் அந்தப் பாறையை அவர்களை விட்டும் சிறிதளவு நகர்த்தினான். அதன் வழியாக அவர்கள் வானத்தைப் பார்த்தார்கள்....” (முஸ்லிம் 2743)

இவ்வாறே அம்மூவரில் ஒவ்வொருவரும் அல்லாஹ் வின் திருப்தியை நாடிச் செய்த தத்தமது நற்செயலின் மூலம் அல்லாஹ்விடம் இறைஞ்சத் தொடங்கினார்கள். அவர்களின் துன்பத்திலிருந்து அல்லாஹ் அவர்களை விடுவித்தான். அவர்கள் அந்தக் குகையை விட்டும் வெளியேறினார்கள்.

அவர்கள் மரணத்திற்குப் பின் வாழ்வும் அழிவுக்குப் பின் ஈடேற்றமும் கிடைக்கப் பெற்றார்கள். அதுதான் பெற்றோர் நலம் பேணியதன் பலன்! அவர்களுக்கு நன்மை செய்ததன் விளைவு!

நல்லுபகாரம் செய்வோரே! இந்தப் பலனை நீங்கள் பார்க்கத்தான் போகிறீர்கள்! உங்கள் குழந்தைகள் சீர்தி ருத்தம் பெறுவதிலும் அவர்கள் உங்களை நேசிப்பதிலும், அவர்களுடைய தாயாரை அவர்கள் கவனிப்பதிலும், அவரிடம் அன்பு செலுத்துவதிலும் நீங்கள் இதனை காணத்தான் போகிறீர்கள்! எனவே பெற்றோருக்கு உப காரம் செய்வதன் மூலம் இவ்வுலகிலும் மறுவுலகிலும் பயனடைந்து கொள்ளுங்கள்.

பெற்றோரை நிந்திப்பவன் என்ன பலனை அனுப விக்கப் போகிறான்? வாழ்க்கையில் கஷ்டத்தையும், மனதில் நெருக்கடியையும், வாழ்வாதாரத்தில் துர்ப்பாக் கியத்தையும் பிள்ளைகளின் நிந்தனையையும் தவிர வேறு எதை அனுபவிக்கப்போகிறான்?

பெற்றோர்களிடம் முரட்டுத்தனமாக நடந்து கொள் ளக்கூடிய அந்த உள்ளங்களுக்கு கேடுதான்! அவர்கள் திருந்தி அல்லாஹ்வின் பக்கம் திரும்பவில்லை எனில்! பெற்றோர்களைத் துன்புறுத்தும் அந்தக் கரங்களுக்கு நாசம்தான்! அவர்கள் வருந்தி அல்லாஹ்விடம் மீளவில் லையெனில்! தாய், தந்தையர் மீது வரம்பு மீறும் நாவு களுக்கும் கேடு உண்டாகட்டும்! அவர்கள் அல்லாஹ் விடம் பாவமன்னிப்புக் கோரவில்லை எனில்!

அவனுடைய தாய் பலவீனத்திற்கு உள்ளாகி- கஷ்டத் துடனே அவனை வளர்த்தாள். தன் உதிரத்தைப் பாலாய் அவனுக்கு ஊட்டினாள். தனது ஊனையும் ஊட்டத் தையும் அவனுக்கு உணவாகக் கொடுத்தாள். அவன் படிப்படியாக உடல் பலம் பெறுவான். அவளோ பலவீன மடைவாள். அவன் தூங்குவான். அவளோ கண் விழித் திருப்பாள். அவனுக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்தால் அவளது முகத்தில் இவ்வுலகம் இருண்டு போய்விடும். அவன் புன்னகைத்தால் அவள் முன் அவளது வாழ்க் கையே புன்னகைக்கும்! அவனது சுகத்திற்காக தனது இன்பங்களைத் துறப்பாள். சுவையான உணவையும் அழகான பானத்தையும் அவனுக்காக விட்டுக் கொடுப் பாள். அவன் சிறியவனாக இருக்கும்போது அவனைத் தாலாட்டுவாள். அவனில் பெரிய நம்பிக்கையை வைத் திருப்பாள். அவன் சரளமாகப் பேச ஆரம்பித்து, வளர்ந்து பெரிய ஆளாக ஆனதும் அவன் விரும்பிய பெண்ணை

அவனுக்கு மண முடித்து வைப்பாள். அவனது சந்தோஷத்தால் அவளும் சந்தோஷமடைவாள். அவனை விட அதிகம் மகிழ்ச்சியடைவாள்.

ஆனால் அன்புக்குரிய வாசகர்களே! ஒரு நாள் தொலைபேசியின் அழைப்பு என் செவிப்பறையைத் தட்டியது. அதன் அருகே சென்று எடுத்துக் கேட்டபோது கரகரப்பான ஓர் அழும் குரலை செவியேற்க முடிந்தது. அது ஒரு நோயாளியின் நெஞ்சு அடைத்துக் கொண்டது போன்று இருந்தது. நாடி நரம்புகள் அறுந்துவிடும் அளவுக்கு இருந்தது. அது ஒரு வயதான தாயின் குரல்! அவளுடைய பிள்ளை அவளை நிந்தித்த சோகக் கதையை எம்மிடம் தெரிவிக்கலாளாள்.

அவள் கூறினாள்: அவனுடைய தந்தை மாறடைப்பால் இறந்து போனார். எனக்கு இன்னொரு பையன் இருக்கின்றான். அவனுக்கு சுமார் பத்து வயது இருக்கும். நான் முதுமையால் பல நோய்களுக்கு ஆளாகியுள்ளேன். தற்போது அந்த மூத்த மகன் தன் மனைவியுடன் மேல் மாடியில் வசிக்கின்றான். ஒவ்வொரு முறையும் அவன் கீழே இறங்கி என்னைக் கடந்து செல்லும் போதெல்லாம் என்னை இழிவுபடுத்துவான். மிக மோசமான வார்த்தைகளால் என்னை அர்ச்சனை செய்வான். அநாதையான அவனது இளைய சகோதரன், அவன் பிள்ளையுடன் சண்டைபோடும் போதெல்லாம் மிக

முரட்டுத்தனமாக அவனை அடித்தே கொல்ல முற்படுவான். எனது முதுமை மற்றும் எனது நோயின் காரணமாக நான் அவனைத் தடுக்கவும் முடியாது. இத்துடன் அவன் நிறுத்திக் கொள்ள மாட்டான். மாறாக தனது சகோதரனது கையை அவன் பிடித்துக் கொள்வான்; அவனுடைய பிள்ளை அவனை அடிப்பதற்குத் தோதுவாக. அவனுடைய பிள்ளையோ அவனை தனது ஆத்திரம் அடங்கும் வரை அடித்து, உதைத்து, அவனைக் கஷ்டப்படுத்திவிடுவான். என் மூத்த மகன் அவனது சகோதரன் மீது பாசத்தையும் இரக்கத்தையும் காட்டுவதற்குப் பதிலாக அவனை தன் மகனிடமிருந்து துன்பத்தையும் அடக்குமுறையையும் அனுபவிக்க விட்டுவிடுவான்.

இன்னும் சொல்வதானால் சில போது அவன் என்னைப் பார்க்கக்கூடாது என்பதற்காக தனது முகத்தை மூடிக்கொண்டு என்னைக் கடந்து செல்வான். அப்போது என்னிடம் முழு வெறுப்புடன் “நீ என் தாய் அல்ல!...” என்று கூறுவான். அதைத் தொடர்ந்து இன்னும் பல வார்த்தைகளைக் கூறுவான். அத்தகைய வார்த்தைகளை உள்ளத்தில் சிறிதளவு கருணை அல்லது இரக்கம் இருப்பவன் கூடச் சொல்ல மாட்டான். இன்னும் பல விதத்திலும் அவன் என்னிடம் நடந்து கொள்கிறான்... என்று அத்தாய் எம்மிடம் கூறினாள்.

பாதுகாப்பான நம் சமுதாயங்களில் இது போன்ற துக்ககரமான செய்தியை இதற்கு முன் நான் செவியேற்

றதாக எனக்கு நினைவில்லை. என்றாலும் இது மட்டும் அரிதாகவும் துர்ப்பாக்கியமாகவும் அமைந்துள்ளது.

“அவனுக்குரிய சில அறிவுரைகளை அவளுக்கு நான் எடுத்துரைக்கத் தொடங்கினேன். (இதன் மூலம்) அவன் தனது பராமுகத்திலிருந்து தெளிவு பெறலாம் என்று கூறினேன். அவ்வளவுதான் அவள் மிகுந்த அச்சத்துடன் என்னிடம், “வேண்டாம்! நீங்கள் அவனிடம் இதுபற்றிப் பேச வேண்டாம். அவன் என்னையும் அவனது சகோதர னையும் துன்புறுத்துவான் என அஞ்சுகிறேன்; அவனையும் அவனது முரட்டுத்தனத்தையும் தடுக்க எனக்கு வேறு வழிவகை கிடையாது. நெடுநாட்களாக நான் அவனிட மிருந்து பல்வேறு கொடுமைகளையும் துன்பங்களையும் சந்தித்துக் கொண்டிருக்கிறேன். என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை” என்று கூறினாள். “அப்படியா னால் அவனுடைய விவகாரத்தை நான் நீதிமன்றத்திற்கு எடுத்துச் செல்கிறேனே” என்று அவளிடம் கூறினேன். அங்கே அவளது குரல் உயர்ந்தது. “நீதிமன்றமா! அங்கே போய் என் கண்மணியைப் பற்றியா நான் முறையிடுவது! என் மார்பகத்திலிலிருந்து பாலூட்டி, என் கையால் வளர்த்து ஆளாக்கியவனைப் பற்றியா முறையிடுவது! அவன் என் பாசத்திற்குரியவன்! அவன் என் பிள்ளை! அவன் என் உயிர் மூச்சு! அவனுக்கு இழிவும் கேவலமும் ஏற்படுவதை நான் பொருந்திக் கொள்ள முடியுமா!... முடியாது! முடியாது! அவனுடைய விவகாரத்தை நான்

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்விடமே முறையிடுவேன். அவன் அவனுக்கு நேர்வழி காட்டுவான்; அவன் நிலையைச் சீர்படுத்து வான்...” என்று கூறினாள். அது காயம்பட்ட இதயத்தின் பெருமூச்சு! அதனை தனது நெஞ்சை விட்டும் இறக்கி வைக்க அவள் விரும்புகிறாள்; தனது பாரத்தைக் குறைக்க விரும்புகிறாள் என்பதை அறிந்து கொண்டேன்.

லாயிலாஹ இல்லல்லாஹ்- வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை... எத்த னையோ தாய்மார்களுக்கு கருணை மிகுந்த உள்ளமும் அன்பு நிறைந்த நெஞ்சும் இருக்கின்றன!

பிரியத்திற்குரியவர்களே! இதன் பிறகு அவனுடைய நிலையை நாம் அறிந்து கொண்டோம். அதாவது அவன் நெருக்கடியான, நிம்மதியில்லாத வாழ்வை வாழ்ந்து கொண்டிருந்தான். இது ஒன்றும் வியப்புக்குரிய விஷய மல்ல. அவன், பெற்றோர் நலம் பேணுகின்ற- மகிழ்ச் சிக்குரிய பூங்காவுக்கான வழியை விட்டும் விலகிச் சென்றான். அதற்குப் பகரமாக துர்ப்பாக்கியம் எனும் தரிசு நிலத்தை, நிந்தித்தல் எனும் பாலைவனத்தைத் தேடிக் கொண்டான். எனவே நாம் மற்றவர்கள் மூலம் படிப் பினை பெறுவோமாக! பிறர் மூலம் பாடம் பெறுபவனே பாக்கியசாலி!

# பூங்கா 6

## பிள்ளைகளுக்குப் பண்பாட்டுப் பயிற்சி அளித்தல்

இந்தப் பூங்காவுக்குரிய பாதை நீளமானதும், சிரமம் மிகுந்ததுமாகும். ஆனாலும் அதில் அழகும் அலங்கா ரமும் இருக்கின்றன. இந்தப் பூங்காவின் பூமி பண்படுத் துவதற்குச் சிரமமானதுதான். என்றாலும் அதன் முடிவு சிறப்பானது; புகழுக்குரியது.

பிள்ளைகளுக்கு நற்குணம் எனும் நீரைப் பாய்ச்சி னால் அவர்கள் பசுமையான தளிர்களாகத் திகழ்வர்! பண்பாட்டுப் பயிற்சி அளித்து பராமரித்தால் அழகிய மலர்களாய் மலர்வர்! ஈமான் எனும் ஒளி பாய்ச்சி அவர் களைப் பிரகாசிக்கச் செய்தால் அவர்கள் வசந்த மாளிகைகளாவர்! அவர்களுக்கு நற்பயிற்சி அளிக்கும் பாதையில் பொறுமையை மேற்கொள்ளுங்கள். அவர் கடளிமிருந்து கண் குளிர்ச்சியையும், அகமகிழ்ச்சியையும் அடைவீர்கள்.

பிள்ளைகளில் ஒருவர் ஒரு முறை பெறும் வெற்றி, நீங்கள் அடைந்த பல கஷ்டங்களை மறக்கடித்து விடும். ஓர் ஆண்டில் அவர்களின் வெற்றி, பல ஆண்டுகள் அவர்களுடன் நீங்கள் கண் விழித்திருந்ததை மறக்கச் செய்துவிடும். அவர்களின் சிறு வயதில் அவர்களால் நீங்கள் துன்பப்படுவது பற்றி பொருட்படுத்தாதீர்கள். அவர்கள் பெரியவர்களாக வளர்ந்து வரும்போது நற்பாக்

கியம் அடைவீர்கள். ஆகையால் அவர்களுக்குத் தொடர்ந்து பாடம் கற்றுக் கொடுங்கள்; அவர்களைச் சீர்திருத்தம் செய்யுங்கள். அவர்களின் ஆரோக்கியத்தைப் பேணுங்கள். அவர்களுடன் உள்ளத்தோடும் உயிரோடும் இருங்கள். அதற்கு இயலவில்லை எனில் உள்ளத்தில் அவர்களுக்குக்காகப் பிரார்த்தித்துக் கொண்டிருங்கள். அவர்கள் உங்கள் தோள் மீது சுமத்தப்பட்ட அமானிதங்கள். அவற்றில் குறைபாடு செய்தீர்கள். "உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளர்கள். தத்தமது பொறுப்பு பற்றி உங்களில் ஒவ்வொருவரும் விசாரிக்கப்படுவீர்கள்" என்று நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். (புகாரி 893)

இப்பூங்காவை பல வருடங்கள் நீர்ப்பாய்ச்சி பராமரித்து வந்தால் மலர்களும் கனிகளும் நிறைந்த வாழ்வை உங்களுக்கு அது வழங்கும். இதற்காக நீங்கள் பல வருடங்கள் பொறுமையை மேற்கொண்டால் இப்பூங்கா உங்களுக்காக உங்களது உலகத்தை மகிழ்ச்சியால் நிரப்பிவிடும். அப்போது உங்கள் பிள்ளைகளில் ஒருவர் திறமையான பொறியாளராகவோ, கை தேர்ந்த மருத்துவராகவோ, அறிவுசால் தொழிலாளராகவோ, திறமையான ஆசிரியராகவோ, இறையருள் பெற்ற மார்க்கப் பிரச்சாரகராகவோ வரலாம். இத்தனைக்கும் மேல் அவர்கள் உங்களுக்கு உபகாரம் செய்து உங்களை மகிழ்விப்பார்கள். அவர்களின் சீர்திருத்தம் மற்றும் உறுதிப்பாட்டின் மூலம் நீங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள்.

இந்த அலங்காரத்திற்குப் பிறகு இவ்வுலகில் வேறு என்ன அலங்காரம் வேண்டும்?! இது அளவற்ற அருளாளனின் அடியார்களது பிரார்த்தனையின் நற்பலனாகும்.

﴿ وَالَّذِينَ يَقُولُونَ رَبَّنَا هَبْ لَنَا مِنْ أَزْوَاجِنَا وَذُرِّيَّاتِنَا قُرَّةَ أَعْيُنٍ وَاجْعَلْنَا لِلْمُتَّقِينَ إِمَامًا ﴾ [الفرقان:٧٤]

“எங்கள் இறைவா! எங்கள் வாழ்க்கைத் துணைகளி லிருந்தும், மக்களிலிருந்தும் எங்களுக்குக் கண் குளிர்ச் சியைத் தருவாயாக! (உன்னை) அஞ்சுவோருக்கு முன்னோடியாகவும் எங்களை ஆக்குவாயாக!” என்று அவர்கள் கூறுகின்றனர். (அல்குர்ஆன் 25:74)

இந்த பண்பாட்டுப் பயிற்சி அளித்தலின் பூங்காவி லிருந்து, உங்களுக்காக உங்கள் பிள்ளைகள் பிரார்த் திக்கின்ற பலனையும் பெறுவீர்கள். உங்கள் மரணத் திற்குப் பிறகும் அந்தப் பலன் உங்களுக்குக் கிடைக்கும். ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்:

((إِذَا مَاتَ الْإِنْسَانُ انْقَطَعَ عَنْهُ عَمَلُهُ إِلَّا مِنْ ثَلَاثَةٍ إِلَّا مِنْ صَدَقَةٍ جَارِيَةٍ أَوْ عِلْمٍ يُنْتَفَعُ بِهِ أَوْ وَلَدٍ صَالِحٍ يَدْعُو لَهُ)) (م/ ١٦٣١)

“நிலையான தர்மம், பயன் தரும் கல்வி, தனக்காப் பிரார்த்தனை செய்யும் நல்லொழுக்கமான பிள்ளைகள் ஆகிய மூன்றையும் தவிர மற்ற செயல்பாடுகள் யாவும் மனிதன் மரணித்ததும் முடிவுக்கு வருகின்றன.” நூல்: முஸ்லிம் 1631

உங்கள் இறைவனின் உதவியால் சொர்க்கத்தில் உங்கள் அந்தஸ்து உயர்த்தப்படுவதன் மூலமும் இந்தப் பூங்காவின் பலனை அனுபவிப்பீர்கள். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ اللهَ عَزَّ وَجَلَّ لَيَرْفَعُ الدَّرَجَةَ لِلْعَبْدِ الصَّالِحِ فِي الْجَنَّةِ فَيَقُولُ يَا رَبِّ أَنَّى لِي هَذِهِ فَيَقُولُ بِاسْتِغْفَارِ وَلَدِكَ لَكَ (حم/ ١٠٢٠٢، جه/ ٣٦٦٠) واللفظ لأحمد وإسناده حسن

“சொர்க்கத்தில் அல்லாஹ் ஒரு நல்லடியாருக்கு அவரது அந்தஸ்தை உர்த்துவான். அப்போது அவர், “என் இறைவா! இது எனக்கு எவ்வாறு கிடைத்தது?” என்று கேட்பார். அதற்கு அல்லாஹ், “இது உன் பிள்ளை உனக்காகப் பாவமன்னிப்பு தேடியதால் கிடைத்தது” என்று கூறுவான். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: அஹ்மத் 10202, இப்னுமாஜா 3660 இந்த வாசகம் அஹ்மதில் இடம் பெற்றுள்ளது. இதன் அறிவிப்புத் தொடர் ஹஸன் எனும் தரத்தில் அமைந்ததாகும்.

பண்பாட்டுப் பயிற்சி நிறைந்த வீடும், பண்பாட்டுப் பயிற்சி நிறைந்த நிழலும் என்னே அழகானது! எனவே பிள்ளைகளுக்கு பண்பாட்டுப் பயிற்சி அளிப்பதில் தொடர்ந்து ஈடுபடுங்கள். அழகான பலனை அறுவடை செய்வீர்கள்.

# பூங்கா 7

## முஸ்லிம்களுக்காகப் பரிந்துரை செய்தல்

இது எத்தகைய பூங்காவெனில் இதில் உழைப்பதில் நாம் அதிகம் குறைபாடு செய்திருக்கிறோம். ஆனால் அல்லாஹ் கூறியுள்ளான்: “யார் அழகிய பரிந்துரை செய் கிறாரோ அதில் அவருக்கும் பங்கு உண்டு.” (4:85)

இது அல்லாஹ்வின் வாக்குறுதியாகும். அதாவது நீங்கள் செய்யும் அழகிய பரிந்துரைக்காக- அதனால் ஏற்படும் நன்மையில் உங்களுக்கும் பங்குண்டு. இது உங்களது பரிந்துரைக்குக் கிடைக்கும் கூலியை விட அதிகப்படியானதாகும். இது இறைவனின் உத்திரவாத மாகும். இந்த உத்திரவாதம் யாருக்கெனில், தன் உள் ளத்தில் தன் சகோதர முஸ்லிம்களைப் பற்றிய நேசத்தை ஏற்படுத்திக் கொண்டு, உடனடியான முயற்சியின் மூலம் அதற்கு வடிவம் கொடுக்க யார் முற்படுகின்றாரோ அவருக்கு! அந்த முயற்சி, தனது பதவியையோ பரிந்து ரையையோ பயன்படுத்தி தன்னால் இயன்ற அளவுக்கு அவர்களின் தேவையை நிறைவேற்றுவதற்காக இருக்க வேண்டும். புகாரி, முஸ்லிமில் உள்ள ஒரு நபிமொழியில் பின்வருமாறு வந்துள்ளது.

عَنْ أَبِي مُوسَى عَنْ النَّبِيِّ ﷺ قَالَ الْمُؤْمِنُ لِلْمُؤْمِنِ كَالْبُنْيَانِ يَشُدُّ بَعْضُهُ بَعْضًا ثُمَّ شَبَّكَ بَيْنَ أَصَابِعِهِ وَكَانَ النَّبِيُّ ﷺ جَالِسًا إِذْ جَاءَ رَجُلٌ يَسْأَلُ أَوْ طَالِبُ حَاجَةٍ

أَقْبَلَ عَلَيْنَا بِوَجْهِهِ فَقَالَ اشْفَعُوا فَلْتُؤْجَرُوا وَلْيَقْضِ اللهُ عَلَى لِسَانِ نَبِيِّهِ مَا شَاءَ (خ/ ٦٠٢٧، م/ ٢٥٨٥، ٢٦٢٧)

“கட்டடங்களில் (செங்கற்கள்) ஒன்று மற்றொன்றைத் தாங்கிப் பிடித்திருப்பது போல ஒரு மு.்.மின் மற்றொரு மு.்.மினுக்கு உதவியாக இருப்பான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டு தமது இரு கை விரல்களைக் கோர்த்துக் காட்டினார்கள். பிறகு நபி(ஸல்)அவர்கள் அமர்ந்திருக்கும் போது ஒரு மனிதர் வந்து தனது தேவை யைக் கேட்டார். உடனே எங்களை நோக்கித் திரும்பி, “(இவருக்காகப்) பரிந்துரை செய்யுங்கள்; நற்கூலி வழங் கப்படுவீர்கள். அல்லாஹ் தன் நபியின் நாவின் மூலம் தான் நாடியதை நிறைவேற்றி வைப்பான்” என்று கூறி னார்கள். அறிவிப்பவர்: அபூமூஸா(ரலி),நூல்: புகாரி 6027, முஸ்லிம் 2585, 2627

கண்ணியத்திற்குரிய சகோதரர்களே! உங்களது பரிந் துரை செவியேற்கப்படாவிட்டாலும் அல்லது உங்கள் நோக்கம் நிறைவேறா விட்டாலும் உங்களுக்குக் கூலி கிடைக்கப் போகிறது என்பது உங்களுக்குப் போதுமா காதா? இதில் உங்களுக்கு முன்மாதிரி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள்தான்! ஏனெனில் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஒரு விஷயத்தில் பரிந்துரை செய்தும் அவர் களது பரிந்துரை நிறைவேறவில்லை.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

عَنْ ابْنِ عَبَّاسٍ أَنَّ زَوْجَ بَرِيرَةَ كَانَ عَبْدًا يُقَالُ لَهُ مُغِيثٌ كَأَنِّي أَنْظُرُ إِلَيْهِ يَطُوفُ خَلْفَهَا يَبْكِي وَدُمُوعُهُ تَسِيلُ عَلَى لِحْيَتِهِ فَقَالَ النَّبِيُّ ﷺ لِعبَّاسٍ يَا عَبَّاسُ أَلَا تَعْجَبُ مِنْ حُبِّ مُغِيثٍ بَرِيرَةَ وَمِنْ بُغْضِ بَرِيرَةَ مُغِيثًا فَقَالَ النَّبِيُّ ﷺ لَوْ رَاجَعْتِهِ قَالَتْ يَا رَسُولَ الله تَأْمُرُنِي قَالَ إِنَّمَا أَنَا أَشْفَعُ قَالَتْ لَا حَاجَةَ لِي فِيهِ (خ/ ٥٢٨٣)

பரீரா என்ற பெண்ணின் கணவர் ஓர் அடிமை. அவர் முகீஸ் என்று அழைக்கப்பட்டார். அவர்- கண்ணீர்த் துளிகள் தாடி வழியாக வடியும் அளவு அழுது கொண்டு அவள் பின்னாலேயே சுற்றித் திரிந்தது இப்போதும் என் கண் முன்னால் காட்சி அளிக்கிறது. (காரணம், பரீரா அடிமைத் தழையிலிருந்து விடுதலை பெற்று சுதந்திரப் பெண்ணாக ஆனதும், அடிமையாகவே நீடித்த தனது கணவரை விட்டும் பிரிந்துவிட முடிவு செய்திருந்தார்.)

நபி(ஸல்)அவர்கள் அப்பாஸிடம், “அப்பாஸே! முகீஸ் பரீராவை நேசிப்பதும், பரீரா முகீஸை வெறுப்பதும் உமக்கு வியப்பாக இல்லையா?!” என்று கேட்டார்கள். பிறகு பரீராவிடம், “நீ அவரைத் திரும்ப அழைத்துக் கொண்டால் நன்றாக இருக்குமே!” என்று கூறினார்கள். அதற்கு அவள், “அல்லாஹ்வின் தூதரே! எனக்கு தாங்கள் இவ்வாறு கட்டளையிடுகிறீர்களா?” என்று கேட் டாள். அதற்கு நபி(ஸல்)அவர்கள், “நான் பரிந்துரை செய் கிறேன் அவ்வளவுதான்” என்றார்கள். உடனே அவள், “எனக்கு அவரிடம் எந்தத் தேவையும் இல்லை” என்று

கூறிவிட்டாள். (புகாரி 5283)

ஒரு முறை நீங்களும் முயற்சித்துப் பாருங்கள். மனிதர்களில் யாருக்கேனும் அவரது தேவைக்காக பரிந்துரை செய்து பாருங்கள்! உங்கள் சகோதரனுக்கு நீங்கள் கொடுத்த மகிழ்ச்சி உங்களது நெஞ்சை எப்படி குளிரச் செய்கிறது என்பதை உணர்ந்து கொள்வீர்கள். உங்களுக்காக அவன் செய்யும் பிரார்த்தனை உங் களது உள்ளத்தைப் பூரிப்படையச் செய்திடும். இது ஒரு நொடிப் பொழுது ஏற்படும் மகிழ்ச்சிதான்! ஆனால் இதிலிருந்து நெடுநாட்களுக்கு ஆனந்தம் பிறக்கின்றது. இது ஒரு மணி நேரத்தைச் செலவிடும் ஒரு காரியம் தான்! ஆனால் இதிலிருந்து மகிழ்ச்சிக்குரிய வாழ்க் கையே பிறக்கின்றது!

## பூங்கா 8

### மனிதர்களிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்துதல்

﴿إِنَّمَا الْمُؤْمِنُونَ إِخْوَةٌ فَأَصْلِحُوا بَيْنَ أَخَوَيْكُمْ وَاتَّقُوا اللهَ لَعَلَّكُمْ تُرْحَمُونَ﴾

நம்பிக்கை கொண்டோர் (அனைவரும்) சகோதரர் களே. எனவே உங்கள் சகோதரர்களுக்கிடையே இணக் கத்தை ஏற்படுத்துங்கள். அல்லாஹ்வை அஞ்சுங்கள்; அருள் செய்யப்படுவீர்கள். (அல்குர்ஆன்: 49:10)

சகோதரர்களே! நல்ல உள்ளங்கள் தங்களுக்குள் பிணக்கு ஏற்படுவதை விரும்பமாட்டார்கள். பிணக்குடன்

இணங்கிப் போகவும் மாட்டார்கள். மாறாக அதனை மாசுபடிந்த சூழலாகவே கருதுவார்கள். அச்சூழல் வாய் மையை விட்டும் விலகியதாகவும் தூய்மையை வெறுக் கக்கூடியதாகவும் இருக்கும். எனவேதான் நல்லுள்ளங் கள் தூய்மையின் நிழலைத் தவிர வேறு எங்கும் ஒதுங்க மாட்டார்கள். சகோதரத்துவத்தின் தென்றலைத் தவிர வேறு எதைக் கொண்டும் நிம்மதியடைய மாட்டார்கள். நேசம் எனும் புல்வெளியில் அன்பு எனும் மலர்களுக்கு மத்தியிலே தவிர வேறு எங்கும் ஓய்வெடுக்க மாட்டார்கள்.

இதனால்தான் அவர்களில் ஒருவரது நிலையை நீங்கள் இவ்வாறு காணலாம். அதாவது நண்பர்களுக்கு மத்தியில் பகைமைப் புயல் வீசும்போது அல்லது குரோதக் காற்று அடிக்கும் போது அவருக்கு இருப்பு கொள்ளாது. சமாதானப் புறாவாக அவர் மாறிவிடுவார். அந்த நண்பர்களுடைய இதயங்களில் நல்லிணக்கமும் உள்ளங்களில் வாய்மையும் திரும்பும் வரை உறங்க மாட்டார். உறவுகளுக்கு மத்தியில் நல்லிணக்கத்தை ஏற்படுத்துபவனின் உள்ளம் என்னே குளிர்ச்சியானது! இத்தகையவனின் கருணைமிக்க உள்ளம் என்னே அழகானது! இப்பூங்காவின் பலன் அல்லாஹ்வின் திருப் தியும் மகத்தான கூலியுமாகும்.

﴿لَا خَيْرَ فِي كَثِيرٍ مِنْ نَجْوَاهُمْ إِلَّا مَنْ أَمَرَ بِصَدَقَةٍ أَوْ مَعْرُوفٍ أَوْ إِصْلَاحٍ
بَيْنَ النَّاسِ وَمَنْ يَفْعَلْ ذَلِكَ ابْتِغَاءَ مَرْضَاةِ اللهِ فَسَوْفَ نُؤْتِيهِ أَجْرًا عَظِيمًا﴾

“மனிதர்களின் பெரும்பாலான இரகசியப் பேச்சுக்களில் எவ்வித நன்மையும் இருப்பதில்லை. தர்மம் செய்யும் படியோ, நற்செயல் புரியும்படியோ மனிதர்களுக்கிடையே நல்லிணக்கம் ஏற்படுத்தும்படியோ அறிவுரை கூறுபவர்களின் பேச்சுக்களைத் தவிர. அல்லாஹ்வின் திருப்தியை நாடி இவற்றைச் செய்வோருக்கு மகத்தான கூலியை வழங்குவோம்.” (அல்குர்ஆன்: 4:114)

உங்கள் சகோதரர்களுக்கிடையில் நல்லிணக்கத்தை ஏற்படுத்தும் போது “(நல்லிணக்கம் எனும்) இந்த நன்மைக்காக அவர்களின் உள்ளத்தை அல்லாஹ் விரிவடையச் செய்வானாக” என்று! அவர்களுக்காக பிரார்த்தனை செய்து ஆரம்பம் செய்யுங்கள். ஏனெனில் “நல்லிணக்கம் என்பது நன்மையான காரியமாகும்” (4:128) என்று அல்லாஹ் கூறுகிறான். பிறகு எதிரும் புதிருமாக இருக்கின்ற அவ்விருவரின் கருத்துக்களை நெருக்கிக் கொண்டே செல்லுங்கள். பிணக்கு ஏற்படுத்தும் விஷயங்களைக் குறைத்துக் கொண்டே வாருங்கள். அவ்விருவரையும் நீங்கள் நேசிப்பதை அவர்களுக்கு வெளிப்படுத்துங்கள். மேலும் அவ்விருவரில் ஒவ்வொருவரிடமும் ஒருவர் மற்றவரை நேசிப்பதாகவும், அவருடைய உள்ளத்தில் இவரைப் பற்றி எந்தப் பகையும் குரோதமும் இல்லை என்றும் கூறுங்கள். இது பொய்யாக இருந்தாலும் பரவாயில்லை. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்:

(لَيْسَ الْكَذَّابُ الَّذِي يُصْلِحُ بَيْنَ النَّاسِ فَيَنْمِي خَيْرًا أَوْ يَقُولُ خَيْرًا) (خ/ ٢٦٩٢)

“மக்களிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்துபவன் பொய்யனல்ல. அதனால் அவன் நன்மையை அடைவான் அல்லது நன்மையச் சொல்லுவான்.” (புகாரி 2692)

உங்கள் சகோதரர்களுக்கிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்துவது தர்மமாகும். எனவே நற்கூலியை எதிர் பார்த்து இதனைச் செய்வதை மறந்துவிடாதீர்கள். நற் கூலியை எதிர்பார்த்துச் செய்வதில்தான் நல்லிணக்கம் வெற்றி பெறுவதன் ரகசியம் அடங்கியுள்ளது. நற் கூலியை எதிர்பார்த்துச் செய்வது நல்லிணக்கத்தின் திறவு கோல் மட்டுமல்ல இந்த முயற்சி இறைவனிடம் ஏற்றுக் கொள்ளப்படுவதற்குரிய ஒரு வழியுமாகும்! நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்:

((كُلُّ سُلَامَى مِنْ النَّاسِ عَلَيْهِ صَدَقَةٌ كُلَّ يَوْمٍ تَطْلُعُ فِيهِ الشَّمْسُ قَالَ تَعْدِلُ بَيْنَ الِاثْنَيْنِ صَدَقَةٌ...)) (خ/ ٢٩٨٩، م/ ١٠٠٩) واللفظ له

மக்கள் தமது மூட்டுக்கள் ஒவ்வொன்றுக்காகவும் சூரியன் உதிக்கின்ற ஒவ்வொரு நாளிலும் தர்மம் செய்வது கடமையாகும். இருவருக்கிடையே நீர் நீதி செலுத்துவதும் தர்மமாகும்...(புகாரி 2989, முஸ்லிம் 1009) இந்த வாசகம் முஸ்லிமில் இடம் பெற்றதாகும்.

## பூங்கா 9
## கற்பித்தல், பிரச்சாரம் செய்தல்

அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது என்னே அழகான பூங்கா! இதன் கனிகள் பலவிதம். இதன் மலர்கள் வசீகரமானவை. பார்வையாளர்களை சலிப்படையச் செய்யாத பூங்கா! இதன் ஊற்று வற்றாதது. இதன் நிழலுக்கு வரையறை கிடையாது. இதன் நீரூற்றுகள் எண்ணிலடங்காதவை. இதில் வெற்றி பெறுபவர் யாரெனில் தனது உள்ளத்தையும், நாவையும், சிந்தனையையும் இதில் யார் ஈடுபடுத்துகிறாரோ அவரே! அவர் தேனீயைப் போலாவார். அது களைப்பையும் சலிப்பையும் உணராமல் மலர்களிலுள்ள மதுவை எடுத்து வந்து தேனை உற்பத்தி செய்கிறது. இப்பூங்காவில் ஈடுபடுபவர் நற்கூலி வழங்கப்படுவார். இதில் அறுவடை செய்பவர் பலன் பெறுவார்; மகிழ்ச்சியடைவார்.

அழகிய வார்த்தை கொண்டு அழைக்கும் அழைப்பாளனாக இரு. ஏனெனில் அழகிய வார்த்தை தர்மமாகும். உன் புன்னகையின் மூலம் நீ அழைப்பாளனாகத் திகழு. ஏனெனில் உன் சகோதரனின் முகத்தில் நீ புன்னகைப்பது கூட உனக்குத் தர்மமே. உன் நற்குணங்கள் மூலமும் நீ அழைப்புப் பணி செய். ஏனெனில் உன் செல்வங்கள் மூலம் அனைத்து மக்களுக்கும் உன்னால் உதவ முடியாது. ஆனால் உன் நற்குணங்கள் மூலம் எல்லோருக்கும் நீ பயனளித்திட முடியும்.

சகோதரனே! இறைத்தூதர் (ஸல்) அவர்களின் செய்தியை மக்களுக்கு எடுத்துச் சொல். அது ஒரே ஒரு வசனமாக இருந்தாலும் சரியே! உன் நண்பர்களுக்கு நபி (ஸல்)அவர்களின் வழிமுறைகளில் ஏதேனும் ஒரு வழிமுறையில் பற்றுதலை ஏற்படுத்து. இறைவனுக்குக் கீழ்ப்படிவதை அவர்களின் உள்ளத்திற்கு உகந்ததாய் ஆக்கு. விவேகத்துடனும் அழகிய அறிவுரைகள் மூலமும் அவர்களுக்கு அழைப்புவிடு. வெறுப்பு, கடினம் ஆகியவற்றை விட்டும் விலகி இரு. அல்லாஹ் கூறுகிறான்:

"(நபியே!) அல்லாஹ்வின் அருளினாலேயே நீர் அவர்களிடம் நளினமாக நடந்து கொள்கிறீர். முரட்டுத் தனமும் வந்நெஞ்சமும் உடையவராக நீர் இருந்திருந்தால் அவர்கள் உம்மை விட்டு ஓடியிருப்பார்கள். அவர்களை மன்னிப்பீராக. அவர்களுக்காகப் பாவமன்னிப்புத் தேடுவீராக. காரியங்களில் அவர்களுடன் ஆலோசனை செய்வீராக. உறுதியான முடிவு செய்துவிட்டால் அல்லாஹ்வையே சார்ந்து இருப்பீராக. தன்னையே சார்ந்து இருப்போரை அல்லாஹ் நேசிக்கிறான்." (3:159)

உன்னிடம் தவறு செய்தவருக்கு நீ அளிக்கும் மன்னிப்பைக் கூட அவருக்கு விடுக்கும் அழைப்பாக ஆக்கு. பாவம் செய்யும் உன் சகோதரருக்கு உதவுவதன் மூலம் அவர் நேர்வழி பெறுவதை எண்ணு. பரிவு எனும் ஒளி மூலம் உன் இரு கண்களை ஒளி பெறச்

செய். அவ்வொளியை நேர்வழியை விட்டும் தூரமாகி விட்ட ஒவ்வொருவருக்கும் பாய்ச்சு. யார் யார் எல்லாம் நேர்வழி பெற வேண்டும் என்று நீ விரும்புகிறாயோ அவர்களுக்கு அது பரவட்டும்.

பாசத்திற்குரியவனே! அழைப்புப் பணி செய்பவனாகத் திகழ்ந்திடு. உன் அண்டை வீட்டாருக்கு நீ அன்பளிப்புச் செய்யும் ஒலி நாடாவின் மூலம், உன் நண்பருக்கு அனுப்பி வைக்கும் புத்தகத்தின் மூலம், “அல்லாஹ் உனக்கு நேர்வழிகாட்டி அருள் புரிவானாக!” என்று உன் இஸ்லாமிய சகோதரனுக்காக நீ செய்யும் உண்மையான பிரார்த்தனையின் மூலம் நீ அழைப்புப் பணி செய்திடு.

உனது முழு ஆற்றல்கள், சிந்தனைகள் மூலமும், சாத்தியமான அனைத்து விஷயங்கள் மூலமும் நீ அழைப்புப் பணி செய்திடு. நீ தங்கும் ஒவ்வொரு இடத்திலும் பாக்கியம் நிறைந்தவனாக இரு. உனக்கு நீயே சிரமங்களை கற்பனை செய்து கொள்ளாதே! காரியங்களைச் சிரமமானதாக ஆக்கிக் கொள்ளாதே! அறிஞர்கள், பிரச்சாரகர்கள், அனுபவசாலிகள் ஆகியோரிடம் ஆலோசனை செய்து உன் பிரச்சாரத்தைத் தொடங்கு. ஏனெனில் உனது பிரச்சாரம் தெளிவான விளக்கத்துடன் அமைய வேண்டும் என்பதற்காக.

﴿ادْعُ إِلَى سَبِيلِ رَبِّكَ بِالْحِكْمَةِ وَالْمَوْعِظَةِ الْحَسَنَةِ وَجَادِلْهُمْ بِالَّتِي هِيَ أَحْسَنُ إِنَّ رَبَّكَ هُوَ أَعْلَمُ بِمَنْ ضَلَّ عَنْ سَبِيلِهِ وَهُوَ أَعْلَمُ بِالْمُهْتَدِينَ﴾[ النحل:١٢٥]

“விவேகத்துடனும் அழகிய அறிவுரையுடனும் உமது இறைவனின் பாதையின் பக்கம் அழைப்பீராக. அவர்களிடம் அழகிய முறையில் விவாதம் செய்வீராக. உமது இறைவன் தனது பாதையை விட்டு விலகியோரை நன்கறிந்தவன். நேர்வழி பெற்றோரையும் அவன் நன்கறிந்தவனே.” (அல்குர்ஆன் 16:125)

உன் கடமை எடுத்துச் சொல்வதைத் தவிர வேறு இல்லை. ﴿وَمَا عَلَيْنَا إِلَّا الْبَلَاغُ الْمُبِينُ﴾ [يس:١٧] “தெளிவாக எடுத்துச் சொல்வது தவிர எங்கள் மீது (வேறு எதுவும்) இல்லை.” (36:17) உள்ளங்களுக்கு நேர்வழி காட்டுவதற்கும் அவற்றின் பூட்டுக்களை திறப்பதற்கும் அல்லாஹ் பொறுப்பு ஏற்கிறான். தன் அடியார்களில் தான் நாடியோருக்கு அவ்வாறு பொறுப்பேற்கிறான்.

﴿ذَلِكَ هُدَى اللهِ يَهْدِي بِهِ مَنْ يَشَاءُ وَمَنْ يُضْلِلِ اللهُ فَمَا لَهُ مِنْ هَادٍ﴾ [الزُّمر:٢٣]

“இதுவே அல்லாஹ்வின் நேர்வழி! இதன் மூலம் தான் நாடியோருக்கு அவன் நேர்வழி காட்டுகிறான். யாரை அல்லாஹ் வழிகேட்டில் விட்டுவிட்டானோ அவனுக்கு நேர்வழிகாட்டுபவன் யாருமில்லை.” (அல்குர்ஆன் 39:23)

உனது பிரச்சாரம் நற்பயன் அளித்து அதன் கனி கனிந்துவிட்டதைக் கண்டால் சந்தோஷப்படு. நீ அடையும் ஒவ்வொரு வெற்றியையும் இன்னொரு வெற்றிக்கான பாதையாகக் கருது. அந்த வெற்றி உனக்காகக் காத்திருக்கிறது. நீ அதை நோக்கி எடுத்து வைக்கும் உனது

எட்டுக்களை ஆவலுடன் எதிர் நோக்கியுள்ளது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தம் சமுதாயம் நேர்வழி பெற்றது குறித்து எத்துணை ஆனந்தம் அடைந்திருப்பார்கள்! இன்னும் சொல்வதானால் யூத மதத்தைச் சேர்ந்த நோய்வாய்ப்பட்ட ஏழைச் சிறுவன் ஒருவன் நேர்வழி பெற்றதற்காக அவர்கள் அடைந்த ஆனந்தம் தான் என்ன!

عَنْ أَنَسٍ قَالَ كَانَ غُلَامٌ يَهُودِيٌّ يَخْدُمُ النَّبِيَّ ﷺ فَمَرِضَ فَأَتَاهُ النَّبِيُّ ﷺ يَعُودُهُ فَقَعَدَ عِنْدَ رَأْسِهِ فَقَالَ لَهُ أَسْلِمْ فَنَظَرَ إِلَى أَبِيهِ وَهُوَ عِنْدَهُ فَقَالَ لَهُ أَطِعْ أَبَا الْقَاسِمِ ﷺ فَأَسْلَمَ فَخَرَجَ النَّبِيُّ ﷺ وَهُوَ يَقُولُ الْحَمْدُ لله الَّذِي أَنْقَذَهُ مِنْ النَّارِ (خ/١٣٥٦)

அனஸ் (ரலி) அவர்கள் அறிவிப்பதாவது: ஒரு யூதச் சிறுவன் நபிகள் நாயகத்துக்கு பணிவிடை செய்து வந்தான். அவன் நோய்வாய்ப்பட்டான். அவனை நலம் விசாரிப்பதற்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வந்தார்கள். அவனுடைய தலைமாட்டில் அமர்ந்து கொண்டு, “நீ இஸ்லாத்தை ஏற்றுக் கொள்” என்று அவனிடம் கூறினார்கள். அவனோ தன் அருகே இருந்த தன் தந்தையைப் பார்த்தான். அவர் அவனிடம், “அபுல் காசிமுக்கு (அதாவது நபியவர்களுக்கு) கட்டுப்படு!” என்று கூறினார். உடனே அவன் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டான். அதன் பிறகு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், “இந்தச் சிறுவனை நரகிலிருந்து காப்பாற்றிய

அந்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!” என்று கூறிய வாறு அங்கிருந்து வெளியேறினார்கள். (புகாரி 1356)

நபிகள் நாயகம்(ஸல்) அவர்களுடைய பிரகாசமான பின்வரும் வாசகத்தைக் கேளுங்கள். அந்த வாசகம் அல்லாஹ்வின் பக்கம் அழைக்கக்கூடிய மிகச் சிறந்த அழைப்பாள (ரான நபிகளா) ரிடமிருந்து, அவருடைய வாய்மையான அழைப்பாளர்களில் ஒருவரை நோக்கிப் புறப்பட்ட வாசகமாகும். அதுதான், கைபர் போர் நடந்த அந்த தினத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அலீ இப்னு அபீதாலிப்(ரலி) அவர்களுக்குச் சொன்ன வாசகம்!

(( عَلَى رِسْلِكَ حَتَّى تَنْزِلَ بِسَاحَتِهِمْ ثُمَّ ادْعُهُمْ إِلَى الْإِسْلَامِ وَأَخْبِرْهُمْ بِمَا يَجِبُ عَلَيْهِمْ فَوَاللهِ لَأَنْ يُهْدَى بِكَ رَجُلٌ وَاحِدٌ خَيْرٌ لَكَ مِنْ حُمْرِ النَّعَمِ )) (خ/ ٢٩٤٢)

அதாவது “நிதானமாகச் சென்று அவர்களது முற்றத் தில் இறங்குவீராக! பிறகு அவர்களை இஸ்லாத்தின் பக்கம் அழைப்பீராக! (அதை ஏற்கும் பட்சத்தில்) அவர் கள் மீது சுமத்தப்படும் கடமைகள் என்ன என்று அவர்க ளுக்குத் தெரிவிப்பீராக! அல்லாஹ்வின் மீது ஆணை யாக! உம் மூலம் ஒரு மனிதருக்கு நேர்வழி காட்டப் படுவது செந்நிற ஒட்டகங்களை விட உமக்குச் சிறந்த தாகும்.” (புகாரி 2942)

நீ அல்லாஹ்வின் பக்கம் அழைப்பதன் மூலமோ அவனுடைய ஷரீஅத்திலிருந்து ஒன்றைக் கற்றுக் கொடுப்

பதன் மூலமோ உனக்குக் கிடைக்கப் போகும் நற்கூலி எவ்வளவு என்பதை உன்னால் எண்ணிக் கணக்கிட முடியாது. ஏனெனில் நீ செய்த பிரச்சாரத்தின் மூலம் யாரெல்லாம் அமல் செய்தார்களோ அல்லது நீ கற்றுக் கொடுத்தவற்றில் ஒன்றை யாரெல்லாம் நடைமுறைப் படுத்தினார்களோ அவர்களில் ஒவ்வொருவருக்கும் கிடைக்கின்ற கூலி போன்று உமக்கும் கிடைக்கும். அவர்களது கூலியில் எதையும் அது குறைத்து விடாது. அல்லாஹ் மகத்தான அருளுடையவன்.

முதலில் உன்னை நீ சீர்திருத்திக் கொள். பிறகு உனது மனைவி, பிள்ளைகளுக்கும், அதன் பிறகு உனது நெருங்கிய உறவினர்களுக்கும் பிறகு அடுத்தடுத்த நிலையில் உள்ள உனது உறவினர்களுக்கும் எடுத்துச் சொல். அல்லாஹ் உனது முயற்சியில் அபிவிருத்தி செய்து, உனது நற்செயலை உன்னிடமிருந்து ஏற்றுக் கொள்ளக்கூடும். திண்ணமாக அவன் வாரி வழங்கு பவனும், தாராளமானவனும் ஆவான்.

அல்லாஹ்வின் பக்கம் அழைப்பதில் எத்தகைய நன்மைகள் அடங்கியுள்ளதோ அத்தகைய நன்மைகளின் காட்சிகளில் ஒன்றை நீ செவியேற்பாயாக. இத்தாலி நாட்டைச் சேர்ந்த கல்வியாளரும் உயர்ந்த அந்தஸ்து பெற்றவருமான ஆல்பர்ட் ஓ. பெச்சினி என்பவர் நமக்கு அதை எடுத்துரைக்கிறார்: எல்லாப் புகழும் அல்லாஹ்

வுக்கே! அவனே எனக்கு அவனது சத்திய மார்க்கத்தின் பக்கம் வழிகாட்டினான். முன்னர் நான் ஒரு நாத்திக வாதியாக இருந்தேன். நான் என்னையும் என்னுடைய ஆற்றல்களையும் வணங்கக்கூடியவனாக இருந்தேன். உலகாயதச் சிந்தனையே என் வாழ்வில் மிகைத்தி ருந்தது. இறைவன் அருளியதாக உள்ள எல்லா மதங் களையும் நான் வெறுத்தேன். அவற்றின் முன்னணியில் இருந்தது இஸ்லாம்தான். அதுவே வரலாற்றில் மதத் திற்கு மோசமானதொரு வடிவத்தை எங்களது பாரம் பரியத்தில் பிரதிபலிப்பதாக இருந்தது.

பொதுவாக எங்களுடைய கற்பனையில் முஸ்லிம்கள் என்றால்- அவர்கள் சிலைகளை வணங்குவார்கள், எதார்த்த நிலையுடன் இணைந்து வாழ்வதை நிராகரிப் பார்கள், தவறான கொள்கைகளில் நம்பிக்கை வைப் பார்கள், அவற்றில்தான் தங்கள் பிரச்சனைகளுக்குத் தீர்வைத் தேடுவார்கள், குருதியாறு ஓட்டும் கொடுங் கோலர்கள், பிறமக்களுடன் சமாதானமாக இணைந்து வாழ மறுப்பவர்கள்- இப்படித்தான் முஸ்லிம்களைப் பற்றி புரிந்து வைத்திருந்தோம்.

இஸ்லாத்திற்கு எதிராக உருவான இத்தகைய சூழ லுக்கு மத்தியில்தான் நான் வளர்ந்து வந்தேன். ஆனால் அல்லாஹ் ஒரு முஸ்லிம் இளைஞரின் கையில் நேர்வழி பெறும் பாக்கியத்தை எனக்கு விதித்துவிட்டான். அந்த

இளைஞர் சம்பாதிப்பதற்காக இத்தாலி வந்தவர். சுயவிருப் பமின்றியே அவரது அறிமுகம் எனக்குக் கிடைத்தது. ஒரு நாள் இரவு மது பரிமாரப்படும் பார் ஒன்றில் வைகறை வரை கண் விழித்துக்கொண்டிருந்தேன். பிறகு போதை யினால் முற்றிலும் உணர்விழந்து அந்த பாரிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தேன். எதைப் பற்றியும் உணர்வில் லாமல் சாலையில் நான் நடந்து கொண்டிருந்தபோது வேகமாக வந்த ஒரு வாகனம் என் மீது மோதியது. இரத்த வெள்ளத்தில் நான் தரையில் வீழ்ந்தேன்.

எதிர்பாராத அந்தச் சூழ்நிலையில் அந்த முஸ்லிம் இளைஞர்தான் எனக்கு உதவி செய்தார். விபத்தை ஏற்ப டுத்திய வாகனம் பற்றி காவல்துறைக்குத் தெரிவித்தார். நான் குணமாகும் வரை என்னைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பையும் ஏற்றிருந்தார். எனக்காக இவ்வனைத் தையும் செய்தவர் ஒரு முஸ்லிம் என்பதை நான் நம்ப வில்லை. நான் அவரிடம் சென்று அவரது மதத்தின் அடிப்படைகள் என்ன? அது எதை ஏவுகிறது? எதைத் தடுக்கிறது? ஏனைய மதங்களைப் பற்றி இஸ்லாத்தின் நிலைப்பாடு என்ன? என்பதை எல்லாம் எனக்கு விளக்கிக் கூறுமாறு வேண்டிக் கொண்டேன்.

அந்த இளைஞரின் நடவடிக்கைகள் மூலம் நான் இஸ்லாத்தையும் அதன் வாழ்க்கை முறையையும் அறிந்து கொண்டேன். இறுதியில், நாம்தாம் வழிகேட்டில்

தட்டழிந்துபோய் விட்டோம்; இஸ்லாம்தான் உண்மை யான மார்க்கம் என்பதை திட்டவட்டமாக அறிந்து கொண்டேன். “இஸ்லாம் அல்லாத மார்க்கத்தை யாரே னும் விரும்பினால் அது அவரிடமிருந்து ஏற்கப்படாது.” என்று இறைவன் கூறியது உண்மையே என்று அறிந்து கொண்டேன். பிறகு இஸ்லாத்தில் சேர்ந்தேன்.

## பூங்கா 10
## நோன்பு துறக்க ஏற்பாடு செய்தல்

இறைவனின் திருப்தியை மட்டுமே நாடி இப்பூங்காவில் பங்கு சேருகிறவருக்கு பன்மடங்கு பலன் உண்டு. சிறி தளவு தூய உணவைக் கொண்டு நோன்பாளிகளுக்கு நோன்பு துறக்க நீங்கள் ஏற்பாடு செய்தால் அந்த நாளில் இரண்டு தடவை நோன்பு நோற்றவரைப் போல் ஆகிவிடு வீர்கள். மேலும் அடர்த்தியான இப்பூங்காவின் நிழலில் நீங்களும் நிழல் பெறுவீகள்.

((مَنْ فَطَّرَ صَائِمًا كَانَ لَهُ مِثْلُ أَجْرِهِ غَيْرَ أَنَّهُ لَا يَنْقُصُ مِنْ أَجْرِ الصَّائِمِ شَيْئًا))

(ت/ ٨٠٧) وقال الترمذي هَذَا حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: “யார் நோன்பாளிக்கு நோன்பு துறக்க ஏற்பாடு செய்கிறாரோ அந்த நோன்பாளிக்குக் கிடைக்கும் கூலி போன்று அவருக்கும் உண்டு. என்றாலும் நோன்பாளியின் கூலி யில் எதையும் அது குறைத்து விடாது.” (திர்மிதி 807)

இது ஹஸன், ஸஹீஹ் எனும் தரத்தில் அமைந்த ஹதீஸ் ஆகும் என்று இமாம் திர்மிதி அவர்கள் கூறியுள்ளார்கள்.

அல்லாஹ்வின் அருளால் இன்று உலகின் ஒவ்வொரு பகுதியிலும் தொண்டு நிறுவனங்கள் இந்த வழிபாட்டை எளிமைப்படுத்துவதில் ஈடுபட்டுள்ளன. அதாவது மிக எளிய வழியில் மிகக் குறைந்த செலவில் இந்த வழிபாட்டில் பங்கு கொள்வதற்கு அவை உங்களுக்கு வழிகாட்டுகின்றன. தேவையுடையோருக்கு அல்லாஹ் விடமிருந்து கிடைக்கும் அருளாகவும் உபகாரம் செய் பவர்களின் கூலியை பன்படங்கு அதிகரிக்கச் செய்யக் கூடியதாகவும் இது அமைகிறது.

நோன்பு துறப்பதற்கான இந்த ஏற்பாட்டின் காட்சியை ஒரு முறை நீங்கள் பார்த்திருக்கலாம். (சவுதியில்) இறை இல்லங்களின் முற்றத்தில் ஈகை மற்றும் நன்மையின் விரிப்புகள் பெரிய அளவில் விரிக்கப்பட்டிருக்கும். அவற் றில் வெளி நாட்டைச் சேர்ந்த ஏழை முஸ்லிம்களும், உள்ளூர்வாசிகளும் பிரியத்துடனும் மகிழ்சியுடனும் ஒன்று கூடியிருப்பார்கள். செல்வந்தர்களும், தனவந்தர்களும், இந்த வெளிநாட்டவர்களுக்கும் ஏழைகளுக்கும் பணி விடை செய்வதை நீங்கள் காணும்போது உங்கள் உணர்வுகளில் ஈமான் பொங்கி வழியும். அந்த செல்வந் தர்கள் அவர்களுக்குப் குளிர்பானங்களையும், சூடான பதார்த்தங்களையும், இனிப்பு வகைகளையும் பரிமாறு

வார்கள். மேலும் சகோதரத்துவமும் பாசமும் நிறைந்த புன்னகையை அந்த ஏழை முஸ்லிம்களிடம் அவர்கள் வெளிப்படுத்தும் போது அந்த ஈமானின் இனிமை இன்னும் அதிகரிக்கும். இது எத்தகைய ஈமானியச் சூழல் எனில் இதுதான் உங்கள் மார்க்கத்தைக் கொண்டு உங்களை பெருமைப்பட வைக்கிறது. இதுதான் ஏழைகளின் முகத் தில் புன்னகையை ஏற்படுத்த செல்வந்தர்களைப் பாடுபட வைக்கிறது. இன்னும் சொல்வதானால் அவர்கள் ஏழை களைத் தேடிச் சென்று அவர்கள் திருப்தியுறும் வகையில் அவர்களுக்கு உதவ வைக்கிறது.

அல்லாஹ்வின் மீது ஆணையாக! ஒரு முதலாளி தன் கையால் ஒரு கவளத்தை எடுத்து அதைத் தனது தொழிலாளியின் வாயில் வைத்ததை நான் என் கண் ணாறக் கண்டபோது அந்த உன்னதமான சகோதரத் துவக் காட்சியை இன்னமும் என்னால் மறக்க முடிய வில்லை. வெட்கம் மேலீட்டால் அந்தத் தொழிலாளி அந்த இடத்தை விட்டு எழுந்து ஓடிவிட்டார். இவரும் அவர் பின்னாலேயே ஓடிச் சென்று அவரது வாயில் அந்தக் கவளத்தை ஊட்டிவிட்டார். இது ஒன்றும் புதிய காட்சி கிடையாது. மாறாக இது நபியவர்கள் கூறியதை நடை முறைப்படுத்திய காட்சிதான். நபி (ஸல்) கூறியதாவது:

((إِذَا أَتَى أَحَدَكُمْ خَادِمُهُ بِطَعَامِهِ فَإِنْ لَمْ يُجْلِسْهُ مَعَهُ فَلْيُنَاوِلْهُ لُقْمَةً أَوْ لُقْمَتَيْنِ أَوْ أُكْلَةً أَوْ أُكْلَتَيْنِ فَإِنَّهُ وَلِيَ عِلَاجَهُ)) (خ/ ٢٥٥٧)

"உங்களில் ஒருவரிடம் அவருடய பணியாள் அவரது உணவைக் கொண்டு வந்தால், அப்பணியாளை அவர் தம்முடன் உட்கார வைத்துக் கொள்ளாவிட்டாலும் அவருக்கு (அந்த உணவிலிருந்து) ஒரு கவளம் அல்லது இரு கவளங்கள் அல்லது ஒரு வாய் அல்லது இரு வாய்கள் கொடுக்கட்டும். ஏனெனில் அதைத் தயாரிக்க அந்தப் பணியாள் பாடுபட்டுள்ளார்." (புகாரி 2557)

## பூங்கா 11

### கடனாளிக்கு சலுகை காட்டுதல்

கண்ணியத்திற்குரிய சகோதரர்களே! அல்லாஹ் உங்களுக்கு செல்வத்தைக் கொடுத்து பேருபகாரம் செய்திருக்கும்போது உங்கள் சகோதரர் தன் தேவைக்காக உங்களிடமிருந்து கடன் வாங்குகிறார் எனில் அதனைத் திருப்பித் தர அவருக்கு நீங்கள் கூடுதல் அவகாசம் வழங்கி- சலுகைக் கரம் நீட்டினால், பிறகு கடனைத் திருப்பித் தருவதில் அவருக்கு நெருக்கடியை ஏற்படுத்தி விடாதீர்கள்! இவ்வாறு செய்வதன் மூலம் நீங்கள் வழங்கிய அருட்பாக்கியம் நிறைந்த கொடையை(கடனை)க் கெடுத்துவிடாதீர்கள்! மாறாக அவருக்கு நீங்கள் சலுகை காட்டுங்கள்; கூடுதல் அவகாசம் கொடுங்கள். உங்கள் தாராள மனத்தில்- செய்த உதவியைச் சொல்லிக் காட்டுதல், கடனை வற்புறுத்தித் திருப்பிக் கேட்டல் என்ற களங்கத்தைச் சேர்த்துவிடாதீர்கள்! ஏனெனில்,

((وَمَنْ يَسَّرَ عَلَى مُعْسِرٍ يَسَّرَ الله عَلَيْهِ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ
وَمَنْ سَتَرَ مُسْلِمًا سَتَرَهُ الله فِي الدُّنْيَا وَالْآخِرَةِ)) (م/ ٢٦٩٩)

“கடனாளிக்கு யார் சலுகை காட்டுகிறாரோ அல்லாஹ் அவருக்கு இவ்வுலகிலும் மறுவுலகிலும் சலுகை காட்டுவான்” என நபி(ஸல்) கூறியுள்ளார்கள். (முஸ்லிம் 2699)

நீங்கள் கடன் கொடுத்த பணத்தில் சிறிதளவை கடனாளிக்குத் தள்ளுபடி செய்வதன் மூலம் உபகாரம் செய்தல் எனும் உங்களது இந்தப் பூங்காவை நீங்கள் இன்னும் அழகுபடுத்தலாம். அப்போது அதன் மூலம் நீங்கள் பேருபகாரம் செய்தவராவீர்கள். அதுவும் பெருமளவு பேருபாகாரம்! அதாவது நற்கூலி கிடைப்பதன் மூலம் முதலில் உங்களுக்கும், கடனில் சிறிதளவு தள்ளுபடி செய்வதன் மூலம் கடனாளிக்கும் பெருமளவு பேருபாகரம் செய்தவராவீர்கள்.

( مَنْ سَرَّهُ أَنْ يُنْجِيَهُ الله مِنْ كُرَبِ يَوْمِ الْقِيَامَةِ فَلْيُنَفِّسْ عَنْ مُعْسِرٍ أَوْ يَضَعْ عَنْهُ)

“மறுமையின் சிரமங்களிலிருந்து அல்லாஹ் தன்னைக் காப்பாற்ற வேண்டுமென யார் விரும்புகிறாரோ அவர் கடனால் சிரமப்படுபவருக்கு கூடுதல் அவகாசம் வழங்கட்டும் அல்லது கடனை தள்ளுபடி செய்யட்டும்” என்று நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். (முஸ்லிம் 1563)

இவ்வுலகில் நற்பாக்கியத்தை நாம் எவ்வளவு அதிகம் தேடுகிறோம்! ஆனால் அதன் வழிமுறைகளில் நாம்

தவறிழைக்கின்றோம். அல்லது மேற்கூறப்பட்ட இறைத் தூதர் காட்டிய இது போன்ற வழிகளில் நற்பாக்கியம் இல்லை என்று எண்ணிவிடுகின்றோம். எனவே அல்லாஹ் தனது வேதத்திலும் தன் தூதரின் நாவின் மூலமாகவும் நமக்கு அளித்த வாக்குறுதிகளைப் பற்றிய உறுதியான நம்பிக்கையை நமது உள்ளங்களில் நாம் நிரப்பிக் கொள்வோமாக! ஏனெனில் அதன் மூலம் இவ்வுலகிலும் மறுவுலகிலும் உண்மையிலேயே நாம் நற்பாக்கியம் பெற முடியும்.

## பூங்கா 12

## இறைவழிப் போராளிக்கு பயண வசதி செய்து கொடுத்தல் அல்லது அவரது குடும்பத்தாருக்கு அவரது பிரதிநிதியாக இருத்தல்

مَنْ جَهَّزَ غَازِيًا فِي سَبِيلِ الله فَقَدْ غَزَا وَمَنْ خَلَفَ غَازِيًا فِي سَبِيلِ الله بِخَيْرٍ فَقَدْ غَزَا

எவர் அல்லாஹ்வின் பாதையில் போர் புரியும் ஒருவருக்குப் பயண வசதி செய்து கொடுக்கிறாரோ அவரும் புனிதப் போரில் பங்கு பெற்றவராவார். எவர் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரியும் ஒருவருக்கு (அவரது குடும்பத்தாரைப் பராமரிப்பதற்காக) சிறந்த பிரதிநிதியாக இருக்கின்றாரோ அவரும் புனிதப் போரில் பங்கு பெற்றவர் ஆவார் என நபி(ஸல்) கூறினார்கள். (புகாரி 2843)

இந்த நற்செயல் மூலம்- நீங்கள் உங்கள் குடும்பத்தாருடனும் உங்கள் குழந்தைகளுடனும் இருந்து கொண்டு-

ஒரு போராளிக்குக் கிடைக்கும் கூலியை உங்களால் சம்பாதிக்க முடியும். அதற்காக நீங்கள் செய்யப் போவது இது மட்டும்தான். அதாவது அல்லாஹ்வின் பாதையில் போர் புரிகின்ற இந்தப் போராளியின் குடும்பத்தாருக்கு தந்தையின் ஸ்தானத்தில் இருந்து நீங்கள் அவர்களுக்கு உதவ வேண்டும். அவர்களுக்குக் கருணை காட்ட வேண்டும்; அவர்களுடைய தேவையை நீங்கள் நிறை வேற்ற வேண்டும்; அவ்வளவுதான்.

## பூங்கா 13
## நடைபாதையை விட்டும் தொல்லை தரும் பொருளை அகற்றுதல்

(( وَتُمِيطُ الْأَذَى عَنْ الطَّرِيقِ صَدَقَةٌ)) (خ/ ٢٩٨٩، م/ ١٠٠٩)

“பாதையை விட்டும் தொல்லை தரும் பொருளை அகற்றுவதும் தர்மமே!” என்று நபி (ஸல்) அவர்கள் கூறி னார்கள். (புகாரி 2989, முஸ்லிம் 1009)

இந்தப் பணி துப்புரவுத் தொழிலாளர்களை நோக்கி கூறப்பட்டதல்ல. உண்மையில் இது நம்முடைய பணி யாகும். இதைச் செய்வதற்கு நாம் அவர்கள் அளவிலே தேவையுடைவர்களாக இருப்பதற்குக் காரணம் இதில் நாம் குறைபாடு செய்வதனால்தான். சிலர் இதனை அற்ப மாகக் கருதி இதைச் செய்யாது விட்டுவிடுகின்றனர். என்றாலும் இதற்கு அல்லாஹ்விடத்தில் மகத்தான அந்தஸ்தும், மதிப்பு மிக்க வெகுமதியும் இருக்கிறது.

நபி(ஸல்) கூறுகின்ற இந்த நபிமொழியக் கேளுங்கள்:

((مَرَّ رَجُلٌ بِغُصْنِ شَجَرَةٍ عَلَى ظَهْرِ طَرِيقٍ فَقَالَ وَاللهِ لَأُنَحِّيَنَّ هَذَا عَنْ الْمُسْلِمِينَ لَا يُؤْذِيهِمْ فَأُدْخِلَ الْجَنَّةَ)) (م/ ١٩١٤)

“ஒரு மனிதர் நடைபாதையில் கிடக்கும் மரக்கிளை ஒன்றைக் கடந்து சென்றார். அப்போது ‘அல்லாஹ்வின் மீது ஆணையாக! முஸ்லிம்களுக்குத் தொல்லைதராத வகையில் இதனை அகற்றுவேன்’ என்று கூறி (அதனை அகற்றி) னார். அதன் காரணமாக அவர் சொர்க்கத்தில் புகுத்தப்பட்டார்” என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம் 1914)

ஒரு மரக்கிளையை பாதை விட்டும் அகற்றுவதில் உங்களுக்குக் கிடைக்கும் கூலி சொர்க்கமாகும். அது வானங்கள் மற்றும் பூமியின் அளவுக்கு விரிவானது. அச் செயல் நன்மைகளின் நந்தவனம்! உங்கள் இறைவன் மிக தாரளமானவனும் பரிவுமிக்கவனுமாவான்.

## பூங்கா 14
## அழகிய வார்த்தை

பிரியத்திற்குரிய சகோதரர்களே! (நல்வழியில்) செலவு செய்ய உங்களால் முடியவில்லை என்றால், அல்லது முஸ்லிம்களுக்கு உதவி செய்வதற்காக உங்களுடைய நேரத்தை அல்லது பதவியை, சக்தியை செலவு செய் வதை சிரமமானதாக நீங்கள் கருதினால், அல்லது இந்த

நன்மைகளை எந்த நிலையிலும் உங்களால் செய்ய இயலவில்லை என்றால் உங்கள் சகோதரனிடம் நீங்கள் கூறும் அழகிய வார்த்தை, இத்தகைய நன்மைகள் அனைத்தையும் விட சிறிதும் சளைத்தது கிடையாது. அது மகத்தானது! அதனால் உங்கள் இறைவனின் உவப்பை நீங்கள் பெறலாம். உங்கள் சகோதரனை ஆறுதலடையச் செய்யலாம். அதன் மூலம் நீங்கள் ஏராளமான நற்கூலியைப் பெறலாம். நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள்: “அழகிய வார்த்தையும் தர்மமே!” (புகாரி 2989)

## பூங்கா 15

### மக்களுக்குத் தொல்லை தராதிருத்தல்

இது ஏராளமான நன்மைகளின் நந்தவனம். இதில் அல்லாஹ்வுடைய அருள் தாராளம் உள்ளது. நன்மைக் கான வழிகள் இதில் அநேகம் உள்ளன. அனைத்தையும் கூறுவதற்கு இங்கு இடம் போதாது; காலம் பற்றாது. என்றாலும் இது ஒரு சிறு வழிகாட்டுதல் மட்டுமே! இல்லை எனில் அல்லாஹ்வின் வேதத்திலும் நபி(ஸல்) அவர்களின் வழிமுறையிலும் நமது உள்ளங்களுக்கு நிவாரணம் அளிக்கக்கூடிய விஷயங்கள் ஏராளம் உள் ளன. என்றாலும் சில உள்ளங்கள் தமக்கே உலோபித் தனம் செய்கின்றன. தம் சகோதரர்களுக்கு உதவாமல் கஞ்சத்தனம் செய்கின்றன. அழகிய வார்த்தையால் கூட

அவர்களுக்கு உதவுவதில்லை. உதவி செய்வதில் அவர் களுடைய நாவைத் தவிர உடம்பு அசையப் போவது கிடையாது. எனவே நற்காரியங்களில் அவர்கள் ஈடுபட வில்லை என்றால், நல்ல வார்த்தைகளை அவர்கள் பேசவில்லை என்றால் அவர்களுக்கு நாம் இவ்வாறு கூறுவதைத் தவிர வேறு என்ன எஞ்சியிருக்க முடியும்? அதாவது “உங்களுக்கு நீங்களே உபகாரம் செய்து கொள்ளுங்கள். அந்த வகையில் மக்களுக்கு நீங்கள் உபத்திரம் தராதீர்கள். மேலும் சொல்லால் செயலால் அவர்களைத் தொந்தரவு செய்யாதீர்கள். ஏனெனில் அபூதர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:

عَنْ أَبِي ذَرٍّ قَالَ سَأَلْتُ النَّبِيَّ ﷺ أَيُّ الْعَمَلِ أَفْضَلُ قَالَ إِيمَانٌ بِاللهِ وَجِهَادٌ فِي سَبِيلِهِ قُلْتُ فَأَيُّ الرِّقَابِ أَفْضَلُ قَالَ أَعْلَاهَا ثَمَنًا وَأَنْفَسُهَا عِنْدَ أَهْلِهَا قُلْتُ فَإِنْ لَمْ أَفْعَلْ قَالَ تُعِينُ ضَايِعًا أَوْ تَصْنَعُ لِأَخْرَقَ قَالَ فَإِنْ لَمْ أَفْعَلْ قَالَ تَدَعُ النَّاسَ مِنْ الشَّرِّ فَإِنَّهَا صَدَقَةٌ تَصَدَّقُ بِهَا عَلَى نَفْسِكَ (خ/ ٢٥١٨)

“எந்தச் செயல் சிறந்தது?” என்று நான் நபி(ஸல்)அவர் களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், “அல்லாஹ்வை நம்புவதும், அவன் வழியில் அறப்போர் புரிவதும்” என்று கூறினார்கள். “எந்த அடிமையை விடுதலை செய்வது சிறந்தது?” என்றேன். அதற்கவர்கள், “விலை மதிப்பு மிக்கதும் எஜமானர்களிடம் பெறுமதி மிக்க அடிமையே” என்றார்கள். “என்னால் இதனைச் செய்ய இயலவில்லை

என்றால்?" என்றேன். அதற்கவர்கள், "பலவீனர்களுக்கு உதவி செய். அல்லது உழைத்து சம்பாதிக்க இயலாத வனுக்கு நன்மை செய்" என்றார்கள். "இதுவும் என்னால் இயலவில்லை என்றால்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "மக்களுக்குத் தீங்கு செய்யாமல் இரு. ஏனெனில் அதுவும் உனக்கு நீ செய்து கொள்ளும் தர்மமாகும்" என்று கூறினார்கள். (புகாரி 2518)

## புண்ணியங்களின் பூங்காவனம் நோக்கி நடப்பதற்கு ஐந்து அறிவுரைகள்

இவை சுருக்கமான அறிவுரைகள்! இவற்றின் மூலம் நீங்களும் உங்கள் நல்லறங்களும் அல்லாஹ்வின் உத வியால் வீணாகி விடாமல் பாதுகாத்துக் கொள்ளலாம்.

1. நீங்கள் செய்யும் நல்லறங்கள் மூலம் அல்லாஹ் வின் திருஉவப்பை நாடுங்கள். மேலும் அவற்றைச் செய் வதில் நபி(ஸல்)அவர்களின் வழிகாட்டுதலைப் பின்பற் றுங்கள். ஏனெனில் இவ்விரண்டு நிபந்தனைகளைக் கொண்டுதான் ஒரு நற்செயல் சரியானதாக ஆகமுடியும்.

﴿ فَمَنْ كَانَ يَرْجُوا لِقَاءَ رَبِّهِ فَلْيَعْمَلْ عَمَلًا صَالِحًا وَلَا يُشْرِكْ بِعِبَادَةِ رَبِّهِ أَحَدًا ﴾

"தமது இறைவனின் சந்திப்பை எதிர்பார்ப்பவர் நல்ல றத்தைச் செய்யட்டும். தமது இறைவணக்கத்தில் எவரை யும் இணை கற்பிக்காது இருக்கட்டும்." (18:110)

2. நன்மையின் அழைப்புக்கு பதிலளிப்பதற்குத் தாம

திக்காதீர்கள்! மாறாக நல்ல மனதுடனும், திருப்தியுடனும், சந்தோஷத்துடனும் அதற்கு விரைந்து செல்லுங்கள். ஏனெனில் இவ்வாறு விரைந்து செல்வது இறையச்சத்தைச் சேர்ந்ததாகும்.

﴿ وَسَارِعُوا إِلَى مَغْفِرَةٍ مِنْ رَبِّكُمْ وَجَنَّةٍ عَرْضُهَا السَّمَوَاتُ وَالأَرْضُ أُعِدَّتْ لِلْمُتَّقِينَ ﴾ [آل عمران:١٣٣]

“உங்கள் இறைவனிடமிருந்து கிடைக்கும் மன்னிப்பின் பாலும், வானங்கள், பூமி அளவுக்கு விசாலமான சொர்க்கத்தின் பாலும் விரையுங்கள். (இறைவனை) அஞ்சுவோருக்காக அது தயாரிக்கப்பட்டுள்ளது.” (3:133)

நன்மை செய்வது பற்றிய நூதனமான கதை ஒன்றைக் கேளுங்கள். அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி)அவர்கள் ந.ஃபில் தொழுது கொண்டிருந்தார்கள். அவர்களுடைய அடிமை நா.ஃபி.ஃ என்பவர், அவர்களுடைய ஏதேனும் தேவையை நிறைவேற்றிக் கொடுப்பதற்காக அதனை எதிர்பார்த்து அவர்களுக்கு அருகில் அமர்ந்திருந்தார். நா.ஃபி.ஃ அவர்கள் மூத்த மார்க்க அறிஞர்களில் ஒருவர். இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் தொகுத்த முஅத்தா நூலின் அறிவிப்பாளர்களில் ஒருவர் என்பது எல்லோரும் அறிந்ததே! அவரிடம் காணப்பட்ட உயர்ந்த குணங்களுக்காக இப்னு உமர்(ரலி) அவர்கள் அவரை மிகவும் நேசித்தார்கள்.

இப்னு உமர்(ரலி) அவர்கள் தமது தொழுகையில் குர்ஆன் ஓதிக் கொண்டிருக்கும் போது "உங்களுக்கு விருப்பமானவற்றை (இறைவழியில்) நீங்கள் செலவழிக் காத வரை நன்மையை அடைந்து கொள்ள மாட்டீர்கள். மேலும் (இறைவழியில்) நீங்கள் எதனைச் செலவழித் தாலும் அல்லாஹ் அதனை நன்கு அறிபவனாக இருக் கின்றான்."(3:92) எனும் வசனத்தை அடைந்ததும் இப்னு உமர்(ரலி) அவர்கள் தமது கையால் சைகை செய் தார்கள். ஆனால் ஏன் அவர்கள் சைகை செய்கிறார்கள் என்பது நா.ஃ.பி.ஃ. அவர்களுக்குப் புரியவில்லை. அந்த வசனத்தை செயல்படுத்துவதற்கு அவர்கள் அதிக ஆர்வ முடையவர்களாக இருந்தார்கள் என்பது கூட அவர்க ளுக்குப் புரியவில்லை. எனவே எதற்காக சைகை செய் தார்கள் என்பது பற்றி விசாரிப்பதற்காக அவர்கள் தொழு கையிலிருந்து ஸலாம் கொடுப்பதை எதிர்பார்த்தவாறு இருந்தர்கள்.

இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறியதாவது: "நான் (அந்த வசனத்தை ஓதும்போது) என்னிடம் உள்ள அடிமைகளைப் பற்றி நான் சிந்தித்துப் பார்த்தேன். உம்மை விடப் எனக்குப் பிரியமானவர் யாரையும் நான் காணவில்லை. எனவேதான் தொழுகையில் இருந்து கொண்டே உம்மை விடுதலை செய்வதற்காக நான் சைகை செய்ய விரும்பினேன். தொழுகை முடிந்த பிறகு எனது மன நிலை என்னை மிகைத்து, அதனால் உம்மை

விடுதலை செய்வதிலிருந்து நான் பின்வாங்கி விடக் கூடாது என்று அஞ்சியே அவ்வாறு சைகை செய்தேன்.” உடனே நா.ஃ.பி.ஃ. அவர்கள், “அப்படியென்றால் (நமக் கிடையே) நட்பு நீடிப்பதை விரும்புகிறேன்” என்றார்கள். இப்னு உமர்(ரலி) அவர்கள் “அது உமக்கு உண்டு” என்று கூறினார்கள்.

3. நன்மை செய்யும் பாக்கியத்தை அல்லாஹ் உங் களுக்கு வழங்கினால் அதனை அழகுறச் செய்யுங்கள். அதற்கு நன்கு முயற்சி செய்யுங்கள். ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்:

“நன்மை செய்தோருக்கு நன்மையும் (அதை விட) அதிகமாகவும் உண்டு. அவர்களின் முகங்களில் இருளோ இழிவோ ஏற்படாது. அவர்களே சொர்க்கவாசிகள். அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள்.” (10:26)

உங்களிடம் தேவைப்படுகிறாரே உங்கள் சகோதரர் அவரது நிலையில் உங்களை வைத்துப் பாருங்கள். நபி(ஸல்) அவர்கள் கூறிய பின்வரும் கூற்றையும் எண்ணிப் பாருங்கள்.

((لَا يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى يُحِبَّ لِأَخِيهِ مَا يُحِبُّ لِنَفْسِهِ)) (خ/ ١٣، م/ ٤٥)

“தனக்கு விரும்புவதையே தன் சகோதரனுக்கும் விரும் பாத வரை உங்களில் யாரும் நம்பிக்கை கொண்டவராக ஆக முடியாது.” (புகாரி 13, முஸ்லிம் 45)

4. நீங்கள் செய்த நன்மையை உங்கள் மனதுக்கு கூறி பெருமைப்பட்டுக் கொள்ளாதீர்கள். நீங்கள் யாருக்கு நன்மை செய்தீர்களோ அவர்களிடம் அதைச் சொல்லிக் காட்டாதீர்கள். மேலும் மக்களில் யாரிடமும் அதைக் கூறிக் காட்டாதீர்கள். ஆனால் அவ்வாறு சொல்லிக் காட்டுவதில் நன்மை இருப்பதாக நீங்கள் கருதினாலே தவிர. ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்:

﴿يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لَا تُبْطِلُوا صَدَقَاتِكُمْ بِالْمَنِّ وَالْأَذَى﴾ [البقرة:٢٦٤]

“நம்பிக்கை கொண்டோரே! உங்கள் தர்மங்களைச் சொல்லிக் காட்டியும் தொல்லை தந்தும் பாழாக்கி விடாதீர்கள்.” (2:264)

நீங்கள் செய்த நன்மைக்கான கூலி அல்லாஹ்விடத்தில் உங்களது தராசில் (நிறுவைக்காக) வைக்கப்பட்டு விட்டது; நீங்கள் யாருக்கு நன்மை செய்தீர்களோ அவர் அதனை மறுத்தாலும் சரியே என்பதை உறுதியாக அறிந்து கொள்ளுங்கள்.

5. உங்களுக்கு நன்மை செய்தவருக்கு அழகிய வார்த்தையைக் கொண்டேனும் கைமாறு செய்யுங்கள். ஏனெனில் அது -அல்லாஹ்வுக்குப் பிறகு- நன்மை செய்ய உங்களைத் தூண்டும். ﴿وَلَا تَنْسَوُا الْفَضْلَ بَيْنَكُمْ﴾ [البقرة:٢٣٧]

“உங்களுக்கிடையே (ஒருவருக்கொருவர்) உபகாரம் செய்து கொள்வதையும் மறவாதீர்கள்.” (2:237)